KALKI 28.11.93 ரூ. 3.00

# கல்கி

ஒரே நாளில் 50,000 இட்லி!



வை.கோவின் எதிர்காலம் என்ன?



# பார்க் டவுன் பெனிபிட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1985

223, தெற்கு தங்கசாலை வீதி (முதல் மாடி), சென்னை - 600 003. போன்:582676; 564354

## கனகதாரா முதலீட்டுத் திட்டம்

**உங்கள் குழந்தைச் செல்வங்களை கோடீஸ்வரனாக்குங்கள்!**

**ரூ. 50,000/-** செலுத்துவீர். 10 ஆண்டுகளில் **ரூ. 50,000/-ஐ** திரும்பப் பெறுவீர்.

மீண்டும் 20ம் ஆண்டு நிறைவில் ரூபாய் **ஒரு கோடியை** பெறுவீர்.

(இந்த திட்டம் மார்ச் '94 வரை)

## வெகுமதி முதலீட்டுத் திட்டம்

ஒரே முறை ரூ. 580/- செலுத்தி 252 மாதங்களுக்குப் பிறகு ரூ. 40,000/- பெறுவீர்.

## பிக்சட் டிபாசிட் திட்டம்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | •5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

மாத வட்டிக்கான செக்குகள் முன்கூட்டியே கொடுக்கப்படும். உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது 90 மாதங்களில் 4 மடங்காகிறது.

## காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம் 15 ஆண்டுகள்

| வைப்புத் தொகை | முதல் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | இரண்டாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | மூன்றாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| ரூ. 6,320/- | ரூ. 6,000/- | ரூ. 6,000/- | ரூ. 56,320/- |
| ரூ. 25,280/- | ரூ. 24,000/- | ரூ. 24,000/- | ரூ. 2,25,280/- |

## பென்ஷனர் நலத் திட்டம் - வட்டி 19 1/2%

வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

## செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

**உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா! இதோ**

ரூ. 7500/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் **ரூ. 1,25,000/-** பெறலாம்

ரூ. 9000/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் **ரூ. 1,50,000/-** பெறலாம்

சேவிங்ஸ் கணக்குகள் மீது 10% வட்டி

SURESH

| கடன் | நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்<br>சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும். | வட்டி விதம் ரூ. 1.85 |
|---|---|---|

கௌரவ ஆலோசகர்:

**P. பாலசுப்ரமணியம்,** B.Sc.

முதன்மை அறங்காவலர்
கந்தகோட்டம், சென்னை - 3.

(Friday Weekly Holiday)

இயக்குனர் குழுத் தலைவர்:

**R. விவேகானந்தன்,** B.Com.

பங்குதாரர்களுக்கு மட்டும் Business Hours :
Week days 8.30 a.m. to 12.30 p.m. &
2.00 p.m. to 6.00 p.m.
Sunday 8.30 a.m. to 12 noon.

**சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி**




# வானத்திலிருந்து வயலுக்கு!

சென்ற திங்கள் கிழமை, திருப்பதிக்கு அருகே குண்டலபள்ளி கிராமத்தில், ஏர்பஸ்-300 வயலுக்குள் ஏர் மாதிரி உழுது நின்றது. பயணிகள் அத்தனை பேரும் உயிர் தப்பினார்கள். அதிலிருந்த சுமார் 260 பயணிகளுள், தனியார் நிறுவன அதிகாரி ஆர். நடராஜனும் ஒருவர்.

விபத்து பற்றி விவரித்தார் நடராஜன் :

**ஹை**தராபாதில், நண்பர் ஒருவரை ஆபீஸ் விஷயமாகச் சந்திக்க வேண்டியிருந்தது. வழக்கம் போல, காலை ஆறேகால் மணிக்கு மீனம்பாக்கத்திலிருந்து சென்னை - ஹைதராபாத் - தில்லி விமானம் புறப்பட்டது. ஆனால் ஏழரை மணி சுமாருக்கு, ஹைதராபாத் விமான நிலையத்தில் இறங்க முடியவில்லை. காரணம், ஒரே பனி மூட்டம். ''விஸிபிலிடி'' போதவில்லை. எப்படியாவது இறங்கிவிடலாம் என்று நினைத்தாரோ என்னவோ, பைலட் பல்லா, இரண்டு முறை விமானதளத்தின் மேலேயே வட்டமடித்தார். முடியவில்லை.

'சென்னைக்கே திரும்பிப் போகிறோம்' என்று அறிவிப்பு வந்தது. கீழே இறக்கிவிடப்பட்ட சக்கரங்கள் உள்ளுக்குள் மடித்துக் கொள்ளப்பட்டன. ஆனால் விமானம் மட்டும் வழக்கமான உயரத்துக்குப் போகவில்லை. வேகமும் குறைந்து விட்டது.

எனக்கு ஜன்னல் பக்கத்து ஸீட். கீழே, நேரே பார்த்தால் விமானத்தின் இறக்கை தான் தெரிந்தது. ஆனால் கொஞ்சம் தள்ளி, மரமும், கட்டடங்களும் வெகு அருகே தெரிய ஆரம்பித்தன. சரி. செயின்ட்தாமஸ் மவுண்ட்தான் வந்து விட்டது போலிருக்கிறது என்று நினைத்தேன். 'பெல்ட்டைக் கட்டிக் கொள்ளுங்கள்!' என்று அறிவிப்புக் கூட வந்துவிட்டது.

விமானம் மிகத் தாழ்வாகப் பறந்து கொண்டிருந்தது மட்டும் நன்றாகத் தெரிந்தது.

**தி**டீரென்று ஓர் அறிவிப்பு வந்தது.

''எமர்ஜன்ஸி லாண்டிங் செய்யப் போகிறோம். தயாராய் இருங்கள்!''

நான் சாய்ந்திருந்த ஸீட்டை நேராக்கிக் கொண்டு, ஸீட்டின் இரண்டு பக்கத்தையும் இறுக்கமாகப் பிடித்துக் கொண்டேன்.

வேகத்தடை மீது வாகனம் செல்லும் போது தட தட தட என்று குலுங்குமே, அதே மாதிரி ஒரே குலுக்கல். ஒன்றிரண்டு பெண்கள் மட்டும் பயந்து போய்க் கூச்சலிட்டார்கள். ஆனால் பின்னாலிருந்த சில வெளி நாட்டுக்காரர்கள், ''யாரும் பயப்படாதீர்கள். விபரீதம் எதுவும் நடந்து விடவில்லை! மெதுவாக இறங்கலாம்!'' என்றனர்.

எல்லோரும் பொத் பொத்தென்று எமர்ஜென்ஸி கதவு வழியே இறங்கினோம். உழுது, நடவு செய்திருந்த வயல். சரியான

சேறு!

அதற்குள் கிராமவாசிகள் பலர் வந்து சூழ்ந்து கொண்டார்கள். உழுத வயல் பாழாகிவிட்டதே என்று முதலில் அவர்கள் கூச்சல் போட்டாலும், பிறகு பால், மோர் என்று உபசாரம் செய்ய ஆரம்பித்தார்கள். காரணம் -

சிரஞ்சீவி, மற்றும் சில சினிமா நடிகர்கள்.

தெலுங்கில் அவர்களிடம் ஒரு பிரசங்கமே செய்தார் சிரஞ்சீவி!

எல்லோரும் மூணு, நாலு கி.மீட்டர் நடந்தே மெயின் ரோடுக்கு வந்தோம். திருப்பதிக்கு பஸ்ஸில் ஏற்றிக் கொண்டு வந்தார்கள். அங்கிருந்து வீட்டுக்கு போன் செய்ய வசதி செய்து கொடுத்தார்கள்.

நான் போன் செய்யும் போது மணி மூன்றரை. அதற்குள் மூன்று மணி நியூஸ் கேள்விப்பட்டு என் குடும்பத்தில் எல்லாரும் கொஞ்சம் கலவரப்பட்டிருந்தனர். போனில் என் குரல் கேட்டதும்தான் அவர்களுக்கு ஆறுதலாயிருந்தது.

சென்னைக்கு அழைத்து வந்ததுமே, ரீஃபண்டுக்கும், மறு பயணத்துக்கும் தங்குவதற்கும் எல்லா ஏற்பாடுகளையும் செய்தது இந்தியன் ஏர்லைன்ஸ்.

இதுவே தனியார் விமானம் என்றால், இத்தனை ஏற்பாடுகளையும் இலகுவாகச் செய்திருக்க முடியாது என்றுதான் தோன்றுகிறது.

• ஹைதராபாதில் இறங்க முயற்சி செய்த போது வெளியே நீட்டப்பட்ட wing flap ஐ உள்ளே இழுத்துக் கொள்ளவே முடியவில்லை. அது இயங்காததுதான், விமானம் வேகம் எடுக்க முடியாது போனதற்குக் காரணம். குறைந்த வேகத்தில் செல்லும்போது, கூடுதலாக எரிபொருள் செலவாகிறது. அது தான் உடனே கட்டாய லாண்டிங் செய்ய வேண்டிய நிலையை காப்டன் பல்லாவுக்கு உண்டாக்கியது.

"ஏர்பஸ் - 300, இருபது வருடங்களுக்கு முன் அறிமுகப்படுத்தப்பட்ட விமானம்!'' என்றார் விமானங்கள் பற்றி நன்கு அறிந்த ஓய்வு பெற்ற விங் கமாண்டர் ஒருவர். "Wing flap ஒழுங்காக வேலை செய்யவில்லை என்பதுதான் விபத்துக்குக் காரணம் என்று கூறப்படுகிறது. புறப்படும் போதே, மீனம்பாக்கத்திலேயே, அது சரியாக இயங்குகிறதா என்று இயக்கிப் பார்த்திருக்க வேண்டும். ஆனால் ஒரு பயணி, அது மீனம்பாக்கத்திலேயே சரியாக இயங்கவில்லை என்றுதான் சொன்னார். அப்படியானால் மெயின்டனன்ஸ் விஷயத்தில் நிர்வாகம் அக்கறை காண்பிக்கவில்லை என்றுதான் தெரிகிறது. 20 வயதான விமானத்தின் விஷயத்தில் எத்தனை ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்! ஏர்பஸ் - 300ஐ விடக் கொஞ்சம் லேட்டஸ்ட்டான ஏர்பஸ் - 320 தான் சில காலம் முன் பெங்களூர் விபத்தில் சிக்கிக் கொண்டது. ஏர்பஸ்களை விட, போயிங் விமானங்கள் அதிகப் பாதுகாப்பானவை என்றே தோன்றுகிறது.

''நல்ல காலம். எரிபொருள் மீதி ஏதும் விமானத்தில் இல்லை. இருந்திருந்தால் அதுவே தீப்பிடிக்கக் காரணமாகி பயணிகளின் உயிருடன் விளையாடியிருக்கும்.

''மரங்களையும், வீடுகளையும், சிறு குன்றுகளையும் சாமர்த்தியமாகத் தவிர்த்து, வயலில் பத்திரமாக இறக்கினாரே பைலட் பல்லா, ஆண்டவனுக்கும் அவருக்கும்தான் அத்தனை பேரும் நன்றி கூற வேண்டும்!''

- சித்தார்த்

புகைப்படம் : நன்றி : தினமலர்

---

## பொள்ளாச்சி நகர வாசகர்களே, தயாராகுங்கள்!

பொள்ளாச்சி நகர வாசகர்களே, கும்பகோணம் மற்றும் கரூர் வாசகர்களைப் போலவே உங்கள் ஊர்ச் சிறப்பிதழ் ஒன்று தயாரிக்கும் வாய்ப்பு, உங்களுக்கும் தயாராய் இருக்கிறது.

நீங்கள் தயாரிக்கும் அந்த பொள்ளாச்சி சிறப்பிதழுக்குச் சிறப்புச் சேர்க்கும் விதமாக என்னென்ன விஷயங்கள் இடம் பெற வேண்டுமென்று விரும்புகிறீர்களோ அவை பற்றி எங்களுக்கு எழுதியனுப்புங்கள்.

ஊரின் தொழில் வளர்ச்சி, கல்வி வளர்ச்சி, தனி மனிதர்கள், நிறுவனங்கள் அல்லது அமைப்புகளின் சிறப்புகள், அரசியல், ஊரின் பாரம்பரியச் சிறப்புகள் மற்றும் நவீனத்தின் தாக்கம், இவற்றோடு சிறுகதை, துணுக்கு என்று எது வேண்டுமானாலும் எங்களுக்கு எழுதியனுப்பலாம்.

நீங்கள் எழுதும் விஷயங்களின் அடிப்படையில், நாங்களும் நேரில் வந்து பார்த்துவிட்டுப் பிரசுரம் செய்கிறோம்.

•

பொள்ளாச்சி நகரம் பற்றிய உங்கள் கடிதங்கள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி : 10.12.93.

உடனடியாக எழுதியனுப்புங்கள்.

- ஆசிரியர்.



# வை.கோ.வின் எதிர்காலம் என்ன?

நீண்ட நாட்களாக அடக்கி வாசித்துக் கொண்டிருந்த தி.மு.க. தலைமை, தயக்கத்தை விலக்கி விட்டுத் துணிச்சலாக வை.கோவை வெளியேற்றியிருக்கிறது. Point of no return என்பார்களே, அந்த நிலையைக் கலைஞரும், வை.கோவும் எட்டி விட, அரசியல் உலகிலும், மக்கள் மத்தியிலும் இன்று கேட்கப்படும் ஒரே கேள்வி : ''வை.கோ.வின் எதிர்காலம் எப்படி?''

''நாங்கள்தான் உண்மையான தி.மு.க.'' என்று முழக்கமிடும் வை.கோ. அந்தக் கட்சியைக் கைப்பற்றுவாரா? இதற்காக அவர் எடுக்கப் போகும் நடவடிக்கைகள் என்ன? இல்லையேல், 'என் பாதை தனிப் பாதை' என்று தனி ஆவர்த்தனம் செய்யத் தொடங்குவாரா? இந்தக் கேள்விகளுக்கான பதிலை, வை.கோவை ஆதரிக்கும் பல்லாயிரக்கணக்கானவர்கள், குறிப்பாக இளைஞர்கள், எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். ''எங்களை அம்போ வென்று விட்டு விட்டு, காலப்போக்கில், நெடுமாறன், வீரமணி போன்று வெறும் அறிக்கைத் தலைவராக மாறி விடுவாரோ என்ற பயமும் எங்களுக்கு இருக்கிறது'' என்கிறார் வை.கோ.வின் அணுக்கத் தொண்டர் ஒருவர்.

''அண்ணா போல் ஆல மரத்தடியிலும், திண்ணையிலும் கட்சி நடத்திக் கொண்டிருந்தால் கழகத்தில் இந்த பிரச்னைகளே வந்திருக்காது. கலைஞர் செய்த தவறு, கட்சிக்குக் கோடிக்கணக்கில் சொத்துக்கள் சேர்த்ததுதான்'' என்கிறார் பத்திரிகையாளர் ஒருவர்.

பொதுக் குழுவைக் கூட்டப் போவதாக மிரட்டியிருக்கிறார் வை.கோ. அவ்வாறு கூட்டி மெஜாரிட்டி நிரூபிக்க முடியுமா என்பது கேள்விக்குறி. மாறன், ஸ்டாலின் ஆகியோரைக் கட்சியை விட்டு நீக்குவதாக அவர் அறிக்கை விடக்கூடும். கலைஞருக்கே 'உங்கள் மீது ஏன் நடவடிக்கை எடுக்கக் கூடாது?' என்று கேட்டு நோட்டீஸ் அனுப்பவும் கூடும். ஆனால் இவையெல்லாம் எந்த அளவுக்கு தி.மு.க.வில் பாதிப்பை ஏற்படுத்தும்?

''தலைமைக் கழகம் உள்ள அறிவாலயம், உதயசூரியன் சின்னம், கட்சிக் கொடி ஆகியவையெல்லாம் எங்களுக்குத்தான் என்று வை.கோ. அணி சொந்தம் கொண்டாட நீதிமன்றத்துக்குப் போகலாம். இதில் அ.தி.மு.க. அரசு எப்படி நடந்து கொள்ளப் போகிறது என்பதுதான் ரொம்ப முக்கியம். முன்பு தி.மு.க. ஆட்சியின் போது, அ.தி.மு.க. தலைமை நிலையத்தைப் பூட்டியதற்குப் பழிவாங்கும் விதமாக இப்போது அ.தி.மு.க. அரசு, அறிவாலயத்தைப் பூட்டுவதற்கான முயற்சிகளுக்கு ஆதரவு கொடுக்கலாம்.

'வர இருக்கிற மயிலாப்பூர், பெருந்துறை இடைத் தேர்தல்களில் உதயசூரியன் சின்னம் முடக்கப்படுமா?' என்றால், 'சேஷனின் முடிவை யாரறிவார், பராபரமே!' என்பதுதான் பதில். மேலும் இரு தேர்தல் கமிஷனர்கள் நியமிக்கப்பட்ட போதிலும், தமது தலைமைத் தகுதியை நீதிமன்றம் மூலம் நிலைநாட்டிக் கொண்டு விட்ட சேஷனின் சிந்தனை, உதயசூரியன் விஷயத்தில் எப்படி இயங்கும் என்று யார் கண்டது?

இந்த இடியாப்பச் சட்டச் சிக்கல்கள் ஒரு பக்கமிருக்க மக்கள் மன்றத்தில் நிலைத்து நிற்க, என்ன கொள்கை அல்லது திட்டம் வைத்திருக்கிறார் வை.கோ? என்று நடுநிலையாளர்கள் கேட்கிறார்கள்.

வை.கோவின் தனி ஈழ ஆதரவு தி.மு.க. வில் உள்ள சில இளைஞர்களை மட்டுமின்றி பா.ம.கவில் உள்ள ஒரு பிரிவையும் ஈர்க்கலாம். ஆனால் அவரது இந்தப் போக்கே அவருக்கு ஆபத்தாகவும் முடியக்கூடும். தடா கிடா என்று மத்திய அரசு பாய்ந்தால் சில காலம் ஹீரோவாக ஒரு குறிப்பிட்ட வட்டாரத்துக்குள் இருப்பார். அப்புறம் அந்த வட்டாரமும் வேறு வேலை பார்க்க விலகிச் சிதறி விடும். ராஜீவின் கொலையாளிகளை ஆதரிப்பவருக்கு மக்கள் ஆதரவு கிடைப்பது அரிது.

அதே போல் கலைஞரையும், அவர் குடும்பத்தையும், தாக்கிப் பேசுகின்ற பேச்சுக்கள் காலப்போக்கில் தொண்டர்களைச் சலிப்படைய வைக்கும். ஜனநாயகத்தில் ஒரு கட்சி நிலைத்து நிற்க வேண்டுமென்றால், வோட்டு அரசியலில் வெற்றிவாகை சூட வேண்டும். இதற்கு இளைஞர் வட்டாரத்தில் ஆதரவு இருந்தால் போதாது. நடுத்தர வர்க்க மக்களின் ஆதரவு தேவை! குறிப்பாகத் தாய்க் குலத்தைத் தம் பக்கம் ஈர்க்க வை.கோ என்ன திட்டம் வைத்திருக்கிறார்? வை.கோ. இல்லாத தி.மு.க. கலபமாகக் காங்கிரஸுடன் கூட்டுச் சேர வாய்ப்புள்ளது என்கிற நிலையில், வை.கோ. யாருடன் கூட்டுச் சேருவார்?

''உண்மையான தி.மு.க. (DMK - G for Gopalsamy & genuine) என்ற முறையில் அண்ணா வகுத்துத் தந்த கொள்கைகள்தான் எங்களுடையவை. கலைஞர் செய்யத் தவறிய பல விஷயங்களுக்கு நாங்கள் குரல் கொடுப்போம். மாநிலங்களுக்கு அதிக உரிமை வேண்டும்; மண்டல் கமிஷன் சிபாரிசுகளை முழுமையாக அமுல்படுத்த வேண்டும் என்றெல்லாம் போராடுவோம்'' என்கிறார், வை.கோ. அணியின் செய்தித் தொடர்பாளரான வழக்கறிஞர் ராதாகிருஷ்ணன்.

கொள்கைகள் - திட்டங்கள் ஒரு பக்கம் இருக்க, ஓர் அரசியல் தலைவர் தனிப்பட்ட முறையில் மக்களைக் கவர வேண்டிய நிர்ப்பந்தம் உள்ள காலம் இது. இந்த அடிப்படையில் பார்த்தால், வை.கோ. நடந்து கொள்ளும் விதம் அவருக்கு அனுகூலமாக அமைவதில்லை.

சமீபத்தில் கோவையில் நடந்த தி.மு.க. மாநாட்டின் போது, வை.கோ. ஆதரவாளர் ஒருவர் இவரைப் பார்த்தவுடன் உற்சாகத்தில் 'வை.கோ. வாழ்க!' என்று கத்தினார். உடனே வை.கோ. அந்த இளைஞரைப் பளாரென்று கன்னத்தில் அடித்ததைப் பத்திரிகையாளர்களும் பார்த்தனர். மறுபுறமாக, நினைத்தவுடன் கண்ணீர் விடும் வை.கோ. வின் இளகிய உள்ளமும் தலைமைப் பதவிக்கு உதவுபடியானது அல்ல. ஒரு கட்சித் தலைவருக்கு நெகிழும் அல்லது சிரித்து மகிழும் சந்தர்ப்பங்களை விடக் கண்டிப்புக் காட்ட வேண்டிய தருணங்கள் அதிகம் வரும் என்பதை வை.கோ. உணர வேண்டும்.

சமீபத்தில் சங்கரதாஸ் கலையரங்கம் புத்தக வெளியீட்டு விழாவுக்கு வை.கோ., வந்திருந்தார். தொண்டர்கள் 'வை.கோ. வாழ்க!' என்று ஜுர வேகத்தில் குரல் கொடுத்த போது, அவர்களை நோக்கி கை யைக் கூட ஆட்டாமல் கான்க்ரீட் முகத்தோடு அமர்ந்திருந்தார். எம்.ஜி.ஆர். போன்றவர்கள், மேடைக்கு வந்தவுடன் முதலில் மக்களைத்தான் கும்பிடுவார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

வை.கோவைத் தொடர்ந்து வெளியேறிவிட்ட மாவட்டச் செயலாளர்களில் பெரும்பாலோர் வை.கோ.வை விட சீனியர்கள். அவர்களை வை.கோ. அலட்சியப் படுத்தி விட முடியாது. இதுவரை நடந்தது போல் இனியும் உணர்ச்சிவசப்பட்டுத் தம் போக்கில் முடிவுகள் எடுக்க முடியாது.

ஒரு கட்சி நிலைத்து நிற்கப் பண பலமும் தேவை. பத்திரிகை பலமும் தேவை. கோவையைச் சேர்ந்த சங்கிலித் தொடர் ஹோட்டல் அதிபர் ஒருவரும் - துணி ஆலை முதலாளி ஒருவரும் உதவுவதாக ஏற்கெனவே கிசுகிசு இருக்கிறது. நின்று போன 'அலை ஓசை'யை வை.கோ. சார்பாக வேலூர் நாராயணன் கொண்டு வருகிறார்.

ஆக, சகல ஆயுதங்களையும் தயாரித்து வருகிறார் வை.கோ. ஆனால் அவை சந்திக்கப் போவது ஐம்பது வருஷ அரசியல் சாணக்கியத்தை அல்லவா!

– ப்ரியன்

கார்ட்டூன் : ராஜன்

அட்டை (வை.கோ.) வண்ணப்படம் : நளினி சுந்தரம்

---



''ஏண்டி... வேலைக்காரியை நிறுத்திட்டே...?''

''நானும் உங்க அம்மாவும் ஆசையா சண்டை போடறோம்... அப்ப குறுக்கே புகுந்து 'சமாதானமாப் போங்க'ன்னு அட்வைஸ் பண்ணினா...!''

– ராஜிராதா



* எத்தனை இட்டிலி வேணுமானாலும் தயார்!



* சந்தானராஜன்

# ஒரே நாளில் 50,000 இட்லி!

தலைப்பைப் படித்துவிட்டு ஆச்சரியப்படுபவர்கள், சிரமம் பார்க்காமல் ஒரு நடை ஸ்ரீபெரும்புதூர் போய் வரலாம்.

அங்கே போய் அன்னபூர்ணா உணவுத் தொழிற்சாலையைப் பார்த்தால், ரொம்ப சுலபமாகப் புரிந்துவிடும்.

அதென்ன, கனவுத் தொழிற்சாலை மாதிரி உணவுத் தொழிற்சாலை?

போன வருடம் 'கல்கி' கோவைச் சிறப்பிதழுக்குப் பேட்டி தந்த போது, தாமோதரசாமி நாயுடு சொன்னார் : 'வெளிநாடுகளிலிருந்து தருந்த கருவிகள் தருவித்து, விரல்கள் படாத, சுத்தமான சிற்றுண்டிகள் தயாரித்து, ஒரே தரத்தில் பல இடங்களில் விநியோகிக்க முயற்சிகள் செய்து வருகிறேன். இதற்காக ஒரே பெயரில் ரெஸ்டாரண்டுகள் சங்கிலித் தொடராகத் தொடங்கப்படும். விரைவில் சென்னைக்கு வந்துவிடும்!' தாமோதரசாமி நாயுடுவின் அந்தக் கனவை நனவாக்கும் தொழிற்சாலைதான் ஸ்ரீபெரும்புதூரில் தொடங்கப்பட்டுள்ளது.

தொழிற்சாலையைச் சுற்றிப் பார்த்தபோது : சிற்றுண்டிகள் வடிவமைத்துத் தயாரிக்க ஹாலந்திலிருந்து ஓர் இயந்திரம்.

கறிகாய் நறுக்கவும், நான்-வெஜ் ஐட்டங்கள் துண்டு போடவும், பாக்கிங் செய்யவும் ஜெர்மனியிலிருந்தும், ஆஸ்த்ரியாவிலிருந்தும் மெஷின்கள்.

மணிக்கு 300 லிட்டர் ஐஸ்கிரீம் தயாரிக்கும் இத்தாலி இயந்திரம்.

தயாரித்த பண்டங்களை அப்படியே குளிர வைக்க, ஸ்வீடனிலிருந்து பிரம்மாண்ட ஃப்ரீஸர்.

வாங்கப்படும் மூலப் பொருள்களின் தரத்தையும், பண்டங்களின் தரத்தையும் பரிசோதனை செய்ய 'க்வாலிடி கண்ட்ரோல்' கூடம்.

(''மாயா பஸார்' மாதிரி எடுக்கும்பட்சத்தில் 'கல்யாண சமையல் சாதம்' சீன் எடுக்கக் கஷ்டப்படவே வேண்டாம்!)

எல்லாமே இயந்திர மயம்தான். மணிக்கு 2500 குட்டிக் குட்டி இட்லிகள்; மணிக்கு 750 கிலோ கறிகாய்களும் பழங்களும் நறுக்கப்படும் வேகம்;

கட்லெட் மேல்பகுதி மொறு மொறுவென்று இருக்க வேண்டாமா? இருக்கிறது 'பிரெட்டிங்' முறை. பொடிப் பொடியாய் மாவு தூவும் 'பாட்டரிங்'. அதிக மாவை, அதிக எண்ணெய்யை நீக்கும் ப்ளோயர்....

சூடாகத் தயாரிக்கப்படும் உணவை முதலில் கோல்ட் ஸ்டோரேஜில் வைத்து, பாஸ்ட்யுரைஸ் செய்கிறார்கள். அப்போதுதான் பாக்டீரியா கிருமிகள் உற்பத்தியாகாது. அப்புறம் ஃப்ராஞ்சைஸ் உணவகங்களுக்கு அனுப்பப்படுகின்றன, இன்சுலேட்டட் வேன்களில்.

''எதற்கு இந்தப் பாடு படவேண்டும்?''

சிரித்தார் மார்க்கெட்டிங் அதிகாரி சுந்தரராஜன்.

''வீட்டில் எல்லாம் நம் உணவு வகைகளை ஒரு நாள் சமைத்தால், மறுநாள் சாப்பிட முடியாது. இவை அப்படி அல்ல. பல நாட்கள் கெடாமலிருப்பதற்காக இவற்றைச் சமைத்த பின் பிராசஸ் செய்கிறோம். அதற்குத்தான் இத்தனை இயந்திரங்கள்.

''நாள்பட ருசி குறையாதா? மாறாதா?''

''அப்படியே இருக்கும். உங்களால் கண்டுபிடிக்கவே முடியாது! இதைத்தான் ஃபுட் பிராசஸிங் என்கிறோம். மைசூரில் உள்ள ஆராய்ச்சி நிலையம் இதற்கான தொழில் நுட்பத்தை நமக்குத் தந்திருக்கிறது. சாப்பிட்டுத்தான் பாருங்களேன்!''

அழைப்பு கிடைத்த பின் சும்மா இருப்போமா? ஒரு பாக்கெட் இட்லி வெட்டினோம். மல்லிப்பூதான்! ''தயாரித்து ஒரு வாரம் ஆயிற்று'' என்றார் சுந்தரராஜன். நம்பத்தான் முடியவில்லை!

வெளிநாடுகளில் மெக்டனால்டு, லையன்ஸ் கார்னர் என்று, வகை வகையான, சங்கிலித் தொடர் உணவகங்கள் இருப்பது போலவே, இங்கேயும் கொண்டு வர வேண்டும் என்பதுதான் தாமோதரசாமி நாயுடுவின் விருப்பம், திட்டம் எல்லாம். இவை எல்லாமே ஃப்ராஞ்சைஸ் முறையில் நிர்வகிக்கப்படும் உணவகங்கள்.

சரி, ஃப்ராஞ்சைஸ் என்றால் என்ன?

ஃப்ராஞ்சைஸ் உரிமை எடுத்து நடத்துபவர்களுக்கு இட்டத்தட்ட 2000 சதுர அடி இட வசதி வேண்டும். உணவுச் சரக்குகளை அன்னபூர்ணா தயாரித்துக் கொடுத்துவிடும். இந்தச் சிற்றுண்டிகளைச் சூடுபடுத்தி கதகதப்புடன் பரிமாற ஹாட் ஏர் கேபின் இயந்திரங்கள் தேவை; பணியாளர்கள் தேவை. வருபவர்கள் வசதியாக உட்கார்ந்து சாப்பிட மேசை-நாற்காலி அவசியம். பில், கணக்கு-

* தாமோதரசாமி நாயுடு



* சுடச் சுட பரிமாறுகிறார்கள்



வழக்குகளைக் கவனித்துக் கொள்ள கம்ப்யூட்டர்.

''ஃப்ரான்சைஸ் உரிமை பெற்று, நடத்துபவர்களுக்கு நாங்களே பயிற்சி கொடுக்கிறோம் இங்கே!'' என்றார் சுந்தர ராஜன்.

ஃப்ரெஞ்ச் ஃப்ரைஸ் (ஒன்றுமில்லை, உருளைக் கிழங்கை விரல் நீளத்துக்கு வெட்டி எண்ணெயில் வறுத்த சமாசாரம் தான்); பார்க்க வடை மாதிரி இருக்கும் ஆனியன் ரிங்; பொட்டடோ ப்ரோக் கெட்ஸ் (உருளைக் கிழங்குதான் - மாவு மாதிரி உருமாறி, எண்ணெயில் வெந்து உருமாறியது!) சமோசா மாதிரியே சைனீஸ் ஸ்ப்ரிங் ரோல்; அப்புறம் இருக்கவே இருக்கிறது இட்லி, வடை, தோசை வகையறாக்கள்....

''உணவுப் பழக்கங்கள் மாறி வரு கின்றன. வெளியே சென்று சிற்றுண்டி அருந்தும் பழக்கம் அதிகமாகி வருகிறது. கணவன் - மனைவி இருவருமே வேலைக் குப் போகும் குடும்பங்களில், நேரம் இருப்பதில்லை; உணவகங்களுக்கு வரு கிறார்கள். இதை எல்லாம் மனத்தில் வைத் துக் கொண்டுதான் அன்னபூர்ணா உண வகங்களை நகர் எங்கும் திறக்க முயற்சிகள் எடுத்துக் கொண்டோம்!'' என்கிறார் தாமோதர சாமி நாயுடு.

வட சென்னையில் உள்ள 'அன்ன பூர்ணா'வில் மட்டும், க்விக் மீல்ஸ் அறி முகப்படுத்தப்பட்டிருக்கிறது. அங்கே அலுவலகங்களில் வேலை செய்கிறவர் களின் சௌகரியத்துக்காகவே இது தொடங் கப்பட்டதாம்.

தொழில் அதிபர்கள், வெளிநாடுகளில் அடிக்கடி பயணம் செய்து அநுபவித்த வர்கள், உயர்மட்ட வாழ்க்கையாளர்கள் என்று இந்த ஃப்ரான்சைஸ் உணவகங்களில் பார்க்க முடிகிறது.

''மத்திய தர மக்களை மனத்தில் கொண்டே இதை எல்லாம் ஆரம்பித்தோம். சுத்தமான, வயிறு கெடாத, உணவு வகை களை நியாயமான விலையில் கொடுக்க ஆரம்பிக்கப்பட்டவைதாம் இந்த ஃப்ரான் சைஸ் உணவகங்கள்!'' என்கிறார் தாமோதர சாமி நாயுடு.

விரைவில் இந்திய ரயில்வேக்களிலும் அன்னபூர்ணாவின் உணவு வகைகள் கிடைக்க இருக்கின்றன என்பது *போனஸ் செய்தி.

- சாருகேசி

அட்டை வண்ணப்படமும் படங்களும் : யோகா

"உங்க பொண்ணு டீ.வி. அதிகமா பார்ப்பாளா?"

"ஆமாம், எப்படி தெரிஞ்சது?"

"பாட்டுப் பாடி முடிஞ்சதும் அதுல ஒரு போட்டி வைச்சாளே!"

- ராதாவாசுதேவன்.





"நான் கட்சி மாறப் போகிற விஷயத்தைத் தலைவர்கிட்டே சொல்லப் போனேன்!"

"ரொம்ப கோவிச்சுக்கிட்டாரா?"

"ஊஹூம், நான் கட்சி மாறுவதற்கு முன்னாடியே அவர் எதிர்க் கட்சிக்கு மாறிவிட்டார்!"

- ரெங்கை. பழனி.



"அந்தக் கட்சித் தலைவர் 'தன் கட்சி இரண்டாகப் பிரிவதை ஒரு நாளும் அனுமதிக்க மாட்டேன்'ன்னு எப்படி சத்தியம் வெச்சுச் சொல்றார்?"

"கட்சியில இருக்கிறதே அவர் ஒருத்தர்தானே அந்த தைரியத்தில் தான்!"

- எஸ்.வி. ஸ்ரீதர்.

மாமியார் : அம்மாடி நல்ல புத்தகம் தந்தே போ. சிரிச்சு சிரிச்சு பாதி உயிர் போயிடுச்சு.

மருமகள் : அப்படின்னா இன்னொரு தடவை வேணும்னாலும் படிங்களேன் அத்தை!

- எம். அசோக்ராஜா.





"காதலின் மகிமை இப்பத்தான் புரியுது?"

"எப்படி?"

"கல்யாணப் பேச்சே எடுக்காத என் அப்பா, 'காதலிக்கிறேன்'னு சொன்ன உடனே கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்ணிட்டாரே!"

- எஸ். சுப்புராயன்.


இன்னாஸ்த, பந்து... உதைச்சு விளையாடுங்க!
சேஷன்
கிருஷ்ண மூர்த்தி
கில்


டும்...


ம், அடுத்த ஆளு யாரு? வாங்க, பார்த்திடு-வோம்...


மூன்றுமுறை வெற்றி! பயஸ்கர வாதிகள் சரண்... சவுனையே காட்டலே...
சவான்


என்யா, ஒரு மாசத்துக்கு மேலே விருந்து வச்சி, கவனிச்சி, உயிரோட வச்சிருக்கியே, இதுலே சவுகைதானே!
நான் போட்டு வச்ச பந்த் திட்டம் ஓ.கே. கண்மணி... ஓஹோ, பந்த் வெற்றி, நன்றி, நன்றி என் தன் பொன்மணி......
மைக்கேல் ஜாக்ஸன் வராங்கடா, காலை வாரி விட்டுட்டா என்னையா? அம்மா என்ன தான் கிளப்புனாங்க, பாரு!...




ஓம்

# கல்கி





1993
நவம்பர் 28
மலர் : 52
இதழ் : 18
ஸ்ரீமுக
கார்த்திகை 13


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

## பயங்கரவாதம் : ஒரு தொடர்கதை!

புனிதத் தலத்துக்கும் அதிலுள்ள புனிதப் பொருளுக்கும் எந்தவிதத் தீங்கும் இன்றி ஹஜ்ரத்பால் முற்றுகை முடிவுற்றதில் பாரத மக்கள் அனைவருமே நிம்மதிப் பெருமூச்சு விடலாம். இதனைத் தங்கள் ராஜதந்திரத்துக்கு மாபெரும் வெற்றி என்பது போல் பிரதமரும் சவானும் மார்தட்டுவதைத்தான் ஜீரணிக்க முடியவில்லை! 'போராளிகளுடன் உடன்பாடு ஏதும் கிடையாது' என்றுதான் சவான் கூறுகிறார். ஆனால் சரணடைந்தவர்களை ராணுவம் சோதிக்காது; ஜம்மு காஷ்மீர் போலீஸ்தான் சோதனைகளை நடத்தி பயங்கரவாதிகளை நிர்ணயிக்கும் என்பதாக வந்துள்ள செய்தியே பயங்கரவாதிகளுக்குக் காண்பிக்கப்பட்ட ஒரு சலுகைதான். "புனிதத் தலங்களைப் பயங்கரவாதிகள் பயன்படுத்துவதை இனி அனுமதிக்க மாட்டோம்" என்று காஷ்மீர் கவர்னர் உறுதி அளித்திருக்கிறார்! 'ஆகா! எப்பேர்ப்பட்ட ஞானோதயம்!' என்று நாமும் மூர்ச்சித்து விழாத குறையாக வியக்கிறோம்!

ஹஜ்ரத்பாலில் சவான் வெற்றிப் பிரவேசம் செய்து மகிழ்ந்து கொண்டிருந்த அதே நேரத்தில் லடாக்கில் ஊடுருவிய 26 பயங்கரவாதிகளை நமது ராணுவம் தாக்கி அழிக்க நேர்ந்தது என்பதானது, பயங்கரவாதத்தை வெற்றி கொள்வது அப்படியொன்றும் சுலபசாத்தியமான காரியம் அல்ல என்பதை உணர்த்தும்.

வெள்ளப் பெருக்கின் போது ஏரி ஒரு பக்கம் உடைப்பெடுத்துக் கொள்ள, அதைச் செப்பனிட்டால் இன்னொரு பக்கம் கரை தகர்ந்து போகும். அதே போலத்தான் பயங்கரவாதத்தின் ஊடுருவலும். பஞ்சாபில் சமாளித்தால் ஸ்ரீநகரில் தலையெடுக்கும்; அங்கே அடக்கினால் லடாக்கில் திமிர் காட்டும். சமீப காலமாக உ.பி. வரை பயங்கரவாதம் ஊடுருவியிருக்கிறது. யுத்தம் என்று வந்தால் எதிரியை நேருக்கு நேர் தாக்கலாம்; வெற்றி தோல்வியை வீரத்தால் நிர்ணயிக்கலாம். ஆனால் ஏகாந்த எல்லைப்புறங்களில் ஊடுருவி, மக்களோடு மக்களாக மறைந்திருந்து, சதிச் செயல்களிலும் வன்முறைகளிலும் ஈடுபடுவோரை எப்படிச் சமாளிப்பது? ஏரி உடைப்பைத் தாற்காலிகமாகச் சமாளித்தால் போதாது. மராமத்து செய்து கரைகளைப் பலப்படுத்த வேண்டும். வரும் வெள்ளத்தைக் கட்டுப்படுத்தவும் வழிகாண வேண்டும். அதுதான் நிரந்தரத் தீர்வு.

காஷ்மீர மக்களுக்கு என்னென்னவோ சலுகைகள் காட்டியும் அவர்கள் நம்மை ஏதோ வேற்று நாட்டு மனிதர்கள் போலப் பாவிப்பதே நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. இதற்கு முக்கிய காரணம், அங்கே ராணுவத்தை நிறுத்தி வைக்கும் நிர்பந்தத்துக்கு நாம் ஆளாகியிருப்பதுதான். இது, ஒரு ஆக்கிரமிப்பு என்ற உணர்வை காஷ்மீர் மக்கள் உள்ளங்களில் எழச் செய்கிறது. எனவே காஷ்மீரில் ஜனநாயக அரசியல் இயக்கங்கள் வலுப்பெற ஊக்குவிப்பதோடு, பயங்கரவாதிகளுக்குப் பயிற்சி தந்து எல்லை கடந்து அனுப்பி வைக்கும் பாகிஸ்தானின் போக்குக்கும் முடிவு கட்டியாக வேண்டும்.

நல்லவேளையாகப் பாகிஸ்தானில் பேனசிர் புட்டோ பதவிக்கு வந்து, இந்தியா - பாகிஸ்தான் நல்லுறவில் தமக்கு அக்கறை இருப்பதையும் புலப்படுத்தி வருகிறார். இதை ஒரு நல்வாய்ப்பாகக் கருதி, பல்வேறு நிலைகளிலும் பேச்சு வார்த்தைகளுக்கு உடனடியாக முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். பயங்கரவாதத்தை ஒடுக்குவதில் நமக்குக் கோடிக்கணக்கில் நஷ்டம் என்றால் பயங்கரவாதத்தை ஊக்குவிப்பதில் பாகிஸ்தானுக்கும் கோடிக்கணக்கில் பணம் விரயமாகிறது. இந்தச் செலவுகளை ஆக்கபூர்வமான பணிகளுக்குத் திருப்பி விட்டால் இரு நாடுகளுமே உன்னத நிலைகளுக்கு உயர முடியும். பரஸ்பர ஒத்துழைப்பும் உதவியும் சாத்தியமாகும். நேற்று வரை எலியும் பூனையுமாக இருந்த இஸ்ரேலும் - பி.எல்.ஓவும் நெருங்கி வந்து பேச்சு வார்த்தைகள் மூலம் அமைதி கண்டு, நட்புறவும் கொள்ள முடியுமென்றால் இந்தியாவும் பாகிஸ்தானும் ஏன் சமாதானத்துக்கு வழி காணக் கூடாது?

காஷ்மீர் பிரச்னை ஒன்று தீர்ந்து போனால் நமது பொருளாதாரப் பிரச்னைகள் அனைத்துக்குமே தீர்வு கண்ட மாதிரி என்பதை மத்திய அமைச்சரவை உணர்ந்தால் நல்லது.

வரட்டு ஜம்பம் வேண்டாம்; நேசக்கரம் நீளட்டும்.

# உளுந்து வடையாக ஒரு வாழ்க்கை!

நாளைக்குப் பையனின் பிறந்த நாள். அப்பாடா! ஒரு வழியா எல்லா ஏற்பாடும் செய்தாகி விட்டது. ஒரு வாரமா என்னை அவன் தூங்கவா விட்டான்?

''என் பிறந்த நாள் எப்ப வரும்? அது ஏன் இன்னும் வரமாட்டேங்குது? அதுவா எப்படி வரும்? ஏன் இன்னைக்கே வந்தா என்ன? கூப்பிடுங்க; அது வரும்; இல்லை; நீங்கதான் அதை வர விடமாட்டேன்றீங்க'' - கேள்வியாக் கேட்டு எனக்குக் கிறுக்கு வர வச்சுட்டான்!

சட்டை எல்லாம் ரெடிமேடுதான். அதைத்தான் அவன் எத்தனை தடவை போட்டுப் போட்டுச் சரி பார்க்கிறது! அவன் தான் அப்படின்னா, அவனைப் பெத்தவ இருக்காளே - என்னில் பாதியாமே - அந்த அம்மா ஆடின ஆட்டம் இருக்கே, அடேயப்பா! அது என்ன கொஞ்சமா நஞ்சமா! 'பையனுக்கு உளுந்து வடைனா ரொம்பப் பிடிக்கும். (அவளுக்குந்தான் - அதை நான் சொல்ல முடியுமா?) அதைத்தான் அவன் கேட்பான். எங்க இருந்தாவது பாமாயில் வாங்கிக்கிட்டு நீங்க வந்தாகணும்; ஆம்பளையினு பிறகு எதுக்காம்.' - நாலு நாளா ஒரே நச்சரிப்பு. என்ன செய்ய? நான் ஆம்பளையினு நிரூபிச்சாகணுமே. 'பல்லெல்லாம் தெரியக் காட்டி' பாமாயில் ஆசையை முகத்தில் தேக்கி, ஒரு வழியாக வாங்கி விட்டேன்! நேற்றுச் சாயங்காலந்தான் ஒரு ஹீரோவுக்குரிய மிடுக்கோடு வீட்டிற்கு வந்தேன்!

இன்னும் சரியாக விடியவில்லை; ஆட்டுரல் சத்தம் கடதடா என்று வந்தது; 'மனைவி அழைக்கு முன்பே எழுந்து நல்ல பிள்ளை என்று பேர் வாங்கக் கூடாதா?' என்று உபதேசம் செய்தது! முகத்தைக் கழுவி விட்டு அவள் முன்னே போனேன்; அங்கே உளுந்து தன் உருவத்தை இழந்து கொண்டிருந்தது.

'சும்மா மசமசனு நிக்காதீங்க; ஒன்னு வெங்காயத்தை உரிங்க, இல்ல மாவரைக்க ஒரு கை கொடுங்க; கிரைண்டர் என்னைக் குத்தான் வாங்கப் போறீகளோ; நானும் சொல்லிச் சொல்லி அலுத்துப் போயிட்டேன்; எனக்கும் ரோஷம் கெட்டுப் போச்சி?'

வெங்காயத்தை உரித்து, மிளகாயை நறுக்கி விழிகளில் அருவியை வரவழைப்பதை விட இது மேல் என்று அரைக்க உட்கார்ந்து விட்டேன்!

சும்மா சொல்லக் கூடாது; இவள் கைபட்டால் எந்தப் பொருளுக்குமே தனி ருசிதான். வடையின் 'சுர்ர்' ஓசை மட்டும் அல்ல; அதன் வாசனையும் சிறுவனை எழுப்பி விட்டது. அவள் என்னை ஒரு பார்வை பார்த்து உதட்டில் பற்களை வைத்தாள்! அந்தப் பார்வை என்னை உசுப்பி விட, பையனைக் குளிப்பாட்டி, ஆடை உடுத்தி அழகு பார்த்தேன். சாமியும் கும்பிட்டாயிற்று. பையன் சாப்பிடத் தொடங்கி விட்டான். உளுந்து வடைதான்; அவனுக்கு அது உலக அதிசயம்!

பாப்பையா



மெல்ல வாசலை எட்டிப் பார்க்கிறேன். நல்ல மனிதர்தான் என் நண்பர்; ஆனால் நடைமுறை உலகம் தெரியாத வெகுளி; மறந்தும் பிறர்க்குத் தீமை நினைக்க மாட்டார்; ஆனால் அவரது வார்த்தைகளோ பிறரை எக்கச் சக்கமான இக்கட்டில் கொண்டு போய் நிறுத்தி விடும். இப்போதும் ஒரு வார்த்தை வெடி குண்டுடன் அவசர அவசரமாக என் வீட்டிற்குள் வந்தார். 'சார்! உங்களுக்கு விஷயந் தெரியுமா? நேத்து பாமாயில் வாங்கினீகளே, அந்தக் கடையிலே பாமாயிலோட வேற எதையோ கலந்துட்டாங்

பக்கம் :

களாம். எங்க தெருவுல ஒரே பரபரப்பாக் கெடக்கு; சார், அத யூஸ் பண்ணிட்டீகளா; பாத்து சார்; அது ரொம்ப காம்பிளிகேஷனை உண்டாக்குதாம். பாவம், சின்னப் பைய னுக்காகனு சொன்னீக; அதனாலதான் ஓடி யாந்தேன்; வர்ரேன் சார்'.

அவர் போய் விட்டார்; 'பாவி மனு ஷன், இதை எங்கிட்ட தனியாச் சொல்லி யிருக்கக் கூடாதோ; இத்தனை சத்தம் போட்டா சொல்லனும்; அவனுக்குக் கேட் டிருக்குமே' - திரும்பி வீட்டிற்குள் போகி றேன், வீட்டிற்கு வந்த மனிதரை 'இருங்கள்' என்று கூட சொல்லத் தோன்றாமல்... அதற் குள் வீட்டிற்குள் ஒரு யுத்தமே நடந்து கொண்டிருந்தது!



வாய்க்கால் அருகே பையனை உட்கார வைத்து, அவன் தலையைப் பிடித்து அமுத் தித் தின்றதை எல்லாம் கக்கச் செய்து கொண்டிருந்தாள் மனைவி. அவனோ 'போ, என்னால முடியாது' என்று சொல்லி அழுது அடம் பிடித்துக் கொண்டிருந்தான். அவன் கையில் இருந்த வடையை அவள் பறிக்க நடத்தும் போராட்டம், அவன் அதை விட மறுத்து எழுப்பிய அழுகை இதில் எது கடந்த காலம் எது நிகழ் காலம் என்று நான் கண்டு பிடிக்க முடியாமல் திணறிய திணறல்!

'ஏய்! என்னம்மா இதெல்லாம்' என் றேன்; அவ்வளவுதான்.

'என்னம்மா, நொன்னம்மா; எந்தக் காரியத்தையாவது உருப்படியாச் செய்யத் தெரியுதா; ஒன்னை வாங்கினா சரியா விசா ரிக்க வாங்க வேணாம். இப்படியா, நல்ல நாளும் அதுவுமா, எல்லாம் என் தலை எழுத்து, கக்குடா சனியனே' என்று பையனை அடிக்கத் தொடங்கி விட்டாள். கை ஓய்ந்ததும், அடுக்களைக்குள் போய் பாமாயில் இருந்த பாத்திரத்தைத் தூக்கிக் கொண்டு வாசலுக்கு வந்தாள். அவ்வளவு தான்; கண்மூடிக் கண் திறப்பதற்குள் நேற்று நான் கடைக்காரனிடம் குழைந்த குழைவு, சிரிப்பு எல்லாவற்றையும் இழுத்துக் கொண்டு, இரண்டு லிட்டர் பாமாயில் அந்த வாய்க்காலில் தண்ணீர் உறவை வெறுத்துத் தனி நடையாகப் பயணம் செய்து கொண் டிருந்தது.

அப்போதாவது விட்டாளா! 'அங்க என்ன பார்வை; ஓடுங்க; நேத்து ராத்திரி உங்க தங்கச்சி வீட்ல ஒரு லிட்டர் கடன் வாங்கிட்டுப் போனாக; அவுங்க சமைக்கிறதுக்கு முந்தி நிறுத்துங்க; இருக்கிற உபத்திரவத்தில் இது வேற உபத்திரவம்' என்று ஒரு விரட்டு. விட்டாற் போதும் என்று அங்கே போனால்... என் தங்கச்சியும் பிள்ளைகளும் ரொம்பச் சாதாரணமாச் சிரித்துக் கொண்டு 'ஏண்ணா! எவனோ கதை கட்டி விட்டா இப்படியா நம்பி நடுங்குறது; ரேஷன் கடைக்காரரைப் பழி வாங்க நெனச்ச இரண்டு மூணு பேரு இப்படியொரு கதையைக் கட்டி விட்டிருக்கானுக; பாவம் அந்தக் கடைக்காரரு; இப்பத்தான் இந்தப் பக்கம் வந்து சொல்லிட்டுப் போறாரு; ஆனாலும் நீ ரொம்பத் தொடை நடுங்கிண்ணா; இது போதாதா அவள் பிள்ளைகளுக்கு? சிரித்தே என்னை உலுப்பி விட்டு விட்டார்கள்!

எப்படியோ கண்டம் தப்பினோம் என்றொரு பக்கம் மகிழ்ச்சி; மற்றொரு பக்கம் நல்ல நாளும் அதுவுமா கட்ட வடையைத் தின்னக் கூட முடியாமல் போய் விட்டதே என்ற வருத்தம். சரி; மீதி வடையையாவது காப்பாற்றுவோம் என்று ஓடி வந்தேன்? வந்து பார்த்தால் என் வீட்டுக் கூரை மேல் காக்கை விருந்தாளிகள், 'இப்படியொரு உபசாரமா!' என்று நன்றி கூறிக் கரைந்து கொண்டிருந்தன!

இத்தனைக்கும் காரணம் என் நண்பரின் சத்தமான வார்த்தைகள் அல்லவா; அவர் எங்கிட்ட மட்டும் ரகசியமாச் சொல்லி யிருந்தால்? இவ்வளவு விரட்டும் ஓட்டமும் இல்லாமல் கொஞ்சம் அமுக்கமாகச் சமா ளித்திருக்கலாம்; ரகசியம் இல்லாததால இன்னைக்கு நான் உரல்ல உளுந்து பட்ட கதையாவுல நசுங்கிப் போயிருக்கேன்; ஆமாம்; நல்ல குணமும் நாசுக்காகச் செயலாற்றும் திறமும் இல்லாவிட்டால் வாழ்க்கை இப்படித்தான் நசுங்கிப் போகும்.....

– சாலமன் பாப்பையா.



# சோவின் கிண்டி பழக்கம்!

பகவத் கீதை கூடக் கேள்வி - பதில் தான். 'உறவினர்களை எப்படி மாய்ப்பேன்? குருவாக இருந்தவர்களை எப்படி எதிர்ப்பேன்? இவர்களை யெல்லாம் கொன்று அதன் மூலம் கிடைக்கும் வெற்றியினால் ஆகப் போவதென்ன?' என்றெல்லாம் அர்ஜுனன் கேட்க, அதற்கு ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் பதிலாக அமைந்ததுதான் பகவத் கீதை - என்று தம் முன்னுரையில் கூறுகிறார் கேள்வி - பதில் புகழ் 'சோ'. 'துக்ளக் கேள்வி - பதில்' தொகுப்பு. அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை - 4. விலை ரூ. 15.00

? நம் நாட்டில் எத்தனை கட்சி இருக்க வேண்டும்?

— ஒரே கட்சி இருந்தால் போதும். அதுவே பிளந்து இரண்டாகும்! இரண்டு நாலாகும்! இப்படியே பல கட்சிகள் தோன்றும்.

? கடவுள் ஏன் கண்ணுக்குத் தெரிவதில்லை?

— கடவுள் ஒரு எம்.எல்.ஏ. உலகம் அவருடைய தொகுதி. மனித இனம் நீடிக்கும் வரை அவருடைய பதவிக் காலம். பதவிக் காலத்தில் தொகுதி மக்களுக்கு எம். எல். ஏ. காட்சி தருவது வழக்கமில்லை.

? புதிய வரிகள் ஏற்படாமலிருக்க நாம் என்ன செய்ய வேண்டும்?

— மந்திரிகளைப் போல் பழைய வரிகளைக் கூடக் கட்ட மறக்க வேண்டும்.

? நிலவைக் காட்டிக் குழந்தைக்கு ஏன் சோறு ஊட்டுகிறார்கள்?

— சூரியனைக் காட்டி ஊட்டினால் குழந்தையின் கண்கள் கூசும். அதனால்தான்.

? மேகங்கள் கூடிக் கலைவது எதை உணர்த்துகிறது?

— ஆகாயத்தில் கூடக் கூட்டணிகள் சற்று நேரத்துக்கு மேல் ஒற்றுமையாக இருக்க முடியவில்லை என்பதை.

? தன்னைத்தானே கரைத்துக் கொண்டு மற்றவருக்கு ஒளிதரும் மெழுகுவர்த்தியைப் பார்க்கும் போது உங்களுக்கு என்ன தோன்றுகிறது?

— மெழுகுவர்த்திக்கு இந்த மாதிரி ஒரு தியாக உணர்வைத் தானம் செய்திருப்பது சினிமா வசனம்தான். மெழுகுவர்த்தி எப்போதும் தன்னைத்தானே எரித்துக் கொள்வதில்லை. மனிதன்தான் அதை எரித்து நாசமாக்கி, தனக்கு ஒளி தேடிக் கொள்கிறான். மகாத்மா காந்தியிலிருந்து மெழுகுவர்த்தி வரை எது அகப்பட்டாலும் அதைத் தீர்த்துக் கட்டி விட்டு 'தியாகி' என்ற பட்டத்தைத் தாராளமாக வழங்குகிறான் மனிதன்.

? கிண்டி பழக்கம் உண்டா?

— உண்டு. ஆனால் சின்ன வயதில் தான். இப்போது விட்டு விட்டேன். இப்போதெல்லாம் தம்ளர்தான்.

? எதற்கும் நாலு பேர் வேண்டும் என்கிறார்களே, யார் அந்த நாலு பேர்?

— பொறிக செய்ய ஒருவர். லஞ்சம் வாங்க ஒருவர், அதை நம்மிடமிருந்து வாங்கிக் கொடுக்க ஒருவர், இதையெல்லாம் வெளியே தெரியாமல் அமுக்கி விட ஒருவர். ஆக மொத்தம் நாலு பேர்!

? 1947-க்கு முன்பும் பின்பும் இந்தியாவின் நிலைமை என்ன?

— முன்பு அடிமை ஏமாளிகள் நிறைந்த நாடாக இருந்தது. இப்போது சுதந்திர ஏமாளிகள் நிறைந்த நாடாக இருக்கிறது.

– பாலன். பூங்குழலி



# பாலம்

●● தாமஸ் ஆல்வா எடிசன் பற்றிய பழைய புத்தகம் ஏதாவது இருந்து அனுப்பி வைத்தால் நல்லது. நியாய விலையும் தரத் தயார்.

- ஈ.டி. விஜயகுமார்,
23, வடக்கு பெருமாள் கோவில் வீதி,
ஈரோடு - 638 001.

●● திருப்பதி (திருமலை)க்கு நடந்து அல்லது சைக்கிளில் சென்று பிரார்த்தனை நிறைவேற்ற உள்ளேன். இதே போன்ற பிரார்த்தனை உள்ளவர்கள் உடன் வந்தால் நன்றாயிருக்குமே.

- டி. ஸ்ரீனிவாசன்,
1, செந்தில் அவென்யு,
காமராஜபுரம்,
சென்னை - 600 073.

●● 1960ம் ஆண்டு முதல் பிரசுரமான சனாதன சாரதி (தமிழ் - ஆங்கிலம்) மாத இதழ்கள் பைண்ட் செய்து வைத்துள்ளேன். வயோதிகம் காரணமாக இந்தப் பொக்கி ஷத்தை என்னால் இப்போது பயன்படுத்த முடியவில்லை. தேவைப்படும் பாபா பக்தர் கள் எனக்கு முன்கூட்டி எழுதித் தகவல் தெரிவித்து விட்டு நேரில் வந்து பெற்றுக் கொள்ளலாம்.

- எம். என். சுப்பிரமணியன்,
56, முதல் மெயின் ரோடு,
தெற்கு ஜகந்நாத நகர்,
வில்லிவாக்கம், சென்னை - 49.

●● ஏற்றுமதி, இறக்குமதி வியாபா ரத்தில் ஈடுபட விருப்பமுள்ளவர்கள் இல வச ஆலோசனைக்கு அணுகவும்.

- என். சிவப்பிரகாசம்,
8A, டி.எம். மேஸ்திரி தெரு (மாடி),
வண்ணான் துறை,
சென்னை - 600 041.

●● அண்ணாமலை பல்கலைக் கழக அஞ்சல் வழிக் கல்வி M.Sc., கணிதம் பாடத் துக்கான வினாத்தாள்கள் (91,92,93) தேவை. விலை விவரம் தெரிவிக்கவும். தபால் மற்றும் ஜெராக்ஸ் எடுக்க ஆகும் செலவு ஏற்கப்படும்.

- எம். பாபு,
A-2-24, PQT Colony,
Mulund West,
BOMBAY - 400 080.

●● இந்தியாவில் எந்த எந்த சர்வ கலாசாலைகளில் P.hd in Microbiology செய் யும் வசதி உள்ளது? அறிந்தவர்கள் தயவு செய்து விவரம் தெரிவிக்கவும்.

MRS. VIJAYALAKSHMI,
38/A, I Floor,
42nd Cross, 8th Main,
4th Block, Rajaji Nagar,
Bangalore - 560 010.

●● எங்கள் இல்லத் திருமண விழா வில் எடுக்கப்பட்ட போட்டோக்கள் 72, நெகடிவ்களுடன் கடந்த 5.9.93 அன்று திரு வாரூர் P.R.M. திருமண மண்டபத்தில் காணாமல் போயின. கிடைக்கப் பெற்ற வர்கள், பொருளை இழந்து தவிக்கும் எனக்குத் தகவல் தெரிவிக்க வேண்டு கிறேன்.

- டி.கே.வி. பாலசுப்பிரமணியன்,
3, கீழவீதி அக்ரஹாரம்,
தலைஞாயிறு அஞ்சல் - 614 712.
வேதாரண்யம் வட்டம்.

●● ஆரம்ப எழுத்தாளர்களுக்காக நான் நடத்தி வந்த ''எப்படிக் கதை எழுதுவது'' (எ.க.எ.) அஞ்சல் வழிப் பள்ளியை உடல் நலக் குறைவு காரணமாக நிறுத்தி வைத்துள் ளேன். பத்து பாடங்களுக்காகவும் பயிற்சிக் கட்டணமாகவும் ரூ 350 பெற்று வந்தேன். அந்தப் பாடங்கள் சில பிரதிகள் கைவசம் உள்ளன. ஆர்வம் உள்ளவர்கள் ரூ 35 அனுப்பினால் பத்து பாடங்களையும் அனுப்பி வைக்கிறேன். (பயிற்சி தர இய லாது.)

- ரா. கி. ரங்கராஜன்,
35, ராமானுஜம் நகர்,
சென்னை - 600 023.

(பாலம் மூலம் இணையும், வாச கர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது.)

# அவன்

ஜன்னலைத் திறந்தால் கடுகாடு... ஆங்காங்கே சமாதிகள். தூரத்தில் பிணம் எரிந்து புகை மேலெழும்பிக் கொண்டிருந்தது.

பெரும்பாலான நாட்களில் காலை தரிசனம் இதுதான். முந்தின நாள் எரியூட்டப்பட்ட பிணம் இரவு முழுக்க எரிந்து, காலையில் புகைந்து கொண்டிருக்கும். சில நேரம் ஒரு மாதிரி 'வாடை' கூட காற்றில் கலந்து வரும்.

அவனுக்கு இந்தப் புகை, இந்த 'வாடை' இதெல்லாம் பழகிப் போன ஒன்று. சில நாட்களில் ஜன்னலைத் திறக்கும் போது, புகை தெரியாவிட்டால் ஏமாற்றமாகக் கூட இருக்கும். இந்த சில வருடங்களில் இந்த கடுகாடு, இதில் உள்ள சமாதிகளுடன் அவன் ஐக்கியப்பட்டு விட்டிருந்தான்.

ஒரு வருடமா, இரண்டு வருடமா... பதின்மூன்று வருடங்கள் இந்த ஊரில் கழித்தாகி விட்டது. செய்யாத வேலையில்லை. ஓட்டலில் டேபிள் துடைத்தது... தள்ளு வண்டியில் தெருத் தெருவாக வாழைப் பழம் விற்றது.. பிளாட்பாரத்தில் போட்டு ஜட்டி, பனியன் விற்றது... வெல்டிங் வேலை கொஞ்ச காலம்... இப்போது ஒரு லேத் பட்டறையில் டர்னர். அல்லும், பகலும் மெஷினுடன் போராட்டம். நண்பன், எதிரி, முதலாளி, காதலி எல்லாம் மெஷின் தான்.

மணி பார்த்தான். பத்தரை. ஞாயிற்றுக் கிழமை என்றாலே இப்படித்தான். காலை எழும்போதே மணி பத்துக்கு மேலாகி விடுகிறது. ராத்திரி படுக்கும் போது மணி மூன்று இருக்குமா? இருக்கும்... நேற்று ராத்திரி ஒயின் ஷாப்பில் உட்கார்ந்து விஸ்கி குடித்து விட்டு, சிக்கன் பிரியாணியும், கக்கா வருவலும் விழுங்கி விட்டு, அரைத் தூக்கத்தோடு ஒரு பாடாவதி படத்தில் செகண்ட் ஷோ உட்கார்ந்திருந்து விட்டு, படம் முடியு முன்பே எழுந்து, தட்டுத் தடுமாறி வந்து சேர்ந்து, படுக்கையில் விழுந்த போது தாராளமாக மணி மூன்று இருக்கும்.

திடீரென்று தலை விண்விண்ணென்று தெறிக்கத் தொடங்கியது. விரல்களால் நெற்றிப் பொட்டில் அழுத்திக் கொண்டான். எல்லாமே சுழல்வது போல்... படுக்கை சுழல்கிறது.. மேஜை, நாற்காலிகள் சுழல்கின்றன. அறை கூட மெல்லச் சுழல்கிறது. பித்தம்... தலைக்கேறி விட்ட பித்தம். இந்த முப்பத்து நான்கு வயதில் முக்கால் வாசி தலைமயிரை நரைக்க வைத்து விட்ட பித்தம்...!

ஒரு கப் காப்பி குடித்தால் தெம்பாக இருக்கும் என்று தோன்றியது. முகத்தைக் கழுவி, சட்டையை மாற்றிக் கொண்டு வெளியே வந்தான். அறைக் கதவைப் பூட்டினான். அது மாடி அறை. கீழே வீடு. ஹாலில் குழந்தைகள் ஓடிப் பிடித்து விளையாடிக் கொண்டிருந்தன. டீ.வி.யில் எதையோ பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்த வீட்டுக்கார மாமியின் மகள், அவனைக் கண்டதும் சடாரென்று எழுந்து உள்ளே சென்றாள். கூச்சம் காரணமில்லை. வெறுப்பாக இருக்கலாம். அவனைப் போல் ஒரு குடிகாரன் மாடியில் வாட



கைக்கு இருப்பதை அவள் விரும்ப மாட்டாள்.

ஓர் அழகான, கம்பீரமான, சிவப்பான இளைஞன்... பளீரென்ற சிரிப்பு, கட்டுமஸ்தான உடம்பு, கம்பீர நடை, காதல் பார்வை... ஒரு ராஜகுமாரனை மாமியின் மகள் கற்பனை செய்து வைத்திருக்கலாம்... அவன்?

நினைவுகள் எதையும் லட்சியம் செய்யாமல் சென்று, ஒரு காப்பி குடித்து விட்டு, சிகரெட் பற்றவைத்துக் கொண்டான். மணி பதினொன்றைத் தாண்டியிருந்தது. இன்றைய காலை டிபன் இந்த காப்பியும், சிகரெட்டும்தான்.

மீண்டும் வீட்டை நோக்கி நடந்தான். எத்தனையோ வேலைகள் கிடந்தன. முடி வெட்டிக் கொண்டு, ஷேவ் செய்ய வேண்டும்; கிழிந்த பனியனைத் தைக்க வேண்டும்; அழுக்குத் துணிகளைத் துவைக்க வேண்டும்... சே!

ஃபேனைப் போட்டுக் கொண்டு, மீண்டும் படுத்தான். தூங்காமல் யோசித்தான். பாக்யலட்சுமியின் ஞாபகம் வந்தது.

பாக்யலட்சுமி... நல்ல சிவப்பு. சுரீர் என்று அடிப்பது போல் பார்வை. அசாத்தியக் கவர்ச்சி. விடுவிடுவென நடப்பாள். வேண்டாம்... அவளை நினைக்கக் கூடாது. அவளை மறக்க வேண்டும். இன்னும் தலைகற்றல் இருந்தது.



கொஞ்சம் தூங்கி எழுந்தால் தலைகற்றல் குறையலாம். ஊகூம்... சில சமயம் தூங்கி எழுந்ததும் தலைகற்றல் இன்னும் அதிகமாகி விடுவதும் உண்டு. அவன் பொதுவாக பித்த மயக்கத்துக்கு டாக்டரிடம் போவதில்லை. மாயவரத்தில் வசித்த போது ஒருநாள் பித்தம் அதிகமாகி, தலைகற்றலோடு வாந்தியும் சேர்ந்து கொள்ள, டாக்டரிடம் சென்று காட்டி, மாத்திரை வாங்கிச் சாப்பிட்டு வந்தான். கிழவி (பாட்டி) திட்டியது. 'பித்தத்துக்கு மாத்திரையா? பேசாம இஞ்சியைத் தட்டி கரைச்சிக் குடிச்சிட்டுப் படுத்து எழுந்திருச்சா பொசாழ (பொழுது சாய) சரியாயிடும். உங்க கிழவருக்கு சாகற வரைக்கும் அதானே வைத்தியம்...! பரம்பரைடி சாமி... அப்படியே வழிவழியா வருதே!' கிழவிக்குக் கண்கள் கலங்கி விடும். செத்துப் போன கிழவரின் ஞாபகம் ஒரு பக்கம், பரம்பரைப் பெருமை இப்படியாவது காப்பாற்றப்படுகிறதே என்ற புளகாங்கிதம் இன்னொரு பக்கம்...

அவன் பாண்டிச்சேரியில் இருந்த போது கிழவி செத்துப் போனது. அவன் அப்போது அப்பாவிடம் சண்டை போட்டுக் கொண்டு, பெட்டியிலிருந்து ஐநூறு ரூபாயைத் தூக்கிக் கொண்டு பாண்டிச்சேரியிலிருந்த ஒரு நண்பனின் வீட்டில் சென்று தங்கியிருந்தான். பத்து நாட்களில் பணமெல்லாம் கரைந்து விட்டது. மீண்டும் ஊருக்குத் திரும்பி வந்த போது வீட்டின் முன் பந்தல் போட்டிருந்தது. பந்தலைப் பார்த்ததுமே அவனுக்கு மனசு 'திக்' கென்றது. வீட்டில் நுழைந்த போது கிழவி படத்துக்கு மாலை போட்டிருந்தது. ''நாசமத்துப் போறவனே... கடைசியா கிழவியைப் பார்க்கக் கூட கொடுத்து வைக்கலியேடா உனக்கு... எங்கே போய்த் தொலைஞ்சு கெடந்தே இத்தனை நாள்? அட்ரஸைக் கூட தெரிவிக்காம இருந்திட்டியே...'' என்று அம்மா கதறினாள்.

கிழவி மேல் அவனுக்குக் கொள்ளை ஆசை. பாக்யலட்சுமிக்குக் கிட்டத்தட்ட கிழவியின் முகம். மூக்கு மட்டும் கொஞ்சம் வித்தியாசம். கிழவிக்குக் குண்டு மூக்கு. பாக்யலட்சுமிக்கு கொஞ்சம் சப்பட்டை. பாக்யலட்சுமியை அவனுக்கு ரொம்பவும் பிடித்துப் போனதற்கு அந்த உருவ ஒற்றுமை கூட காரணமாக இருக்கலாம்.

பாக்யலட்சுமி ஒன்றும் சாதாரணமானவள் அல்ல. அவனது பலம், பலவீனங்கள் அத்தனையும் அவளுக்கு அத்துபடி. அவன் சிகரெட் பிடிப்பது, தண்ணி போடு

வது எல்லாம் அவளுக்குத் தெரியும். தனது குற்றங்களை அவளிடம் மறைக்க அவன் முயன்றதுமில்லை. ஆனால், தனது அவமானங்களும் துன்பங்களும் அவளறியும்படி நடந்து கொள்ள மாட்டான். மாதக் கடைசியில் சாப்பாட்டுக்குக் கூட கையில் காக இல்லாமல், கரீம் பாயிடம் கந்து வட்டிக்கு நூறோ, இருநூறோ வாங்க நேரும் போது அவளிடம் சொல்லிக் கொண்டதில்லை. முதலாளி ஒருமுறை வேலையில் தப்புக் கண்டுபிடித்து, கெட்ட வார்த்தையில் திட்டி, அடிக்க கையை ஓங்கிக் கொண்டு வந்ததை அவளிடம் சொல்லாமல் மறைத்து விட்டான். கௌரவம்... வெட்டி கௌரவம்...! அவனது அழுத்தமான போக்கு ஊமைத்தனம் - அவனது அவமானங்களை மறைக்கும் கவசமாக இருந்தது. அவனது வெட்டி கௌரவத்தையும் காப்பாற்றிக் கொண்டிருந்தது.

ஆனால், சமீப நாட்களாக பாக்யலட்சுமி அவனது கவசத்தையே தகர்க்கத் தொடங்கியிருந்தாள். அவன் சொல்லாமலேயே அவனது ரகசியங்களைக் கண்டுபிடித்தாள். எந்தக் கிழமையில் எந்த சட்டை போடுவான் என்று ஞாபகம் வைத்திருந்தாள். தலையில் எண்ணெய் வைக்காமல் தலை வாரியிருந்தால் கோபித்தாள். நகங்கள் நீளமாகத் தெரிந்தால், பக்கத்தில் உட்கார்ந்து அக்கறையாக வெட்டி விட்டாள். வேட்டி அழுக்காக இருந்தால், மாற்று உடை தந்து, உடனே துவைத்து உலர்த்தித் தந்தாள்.

அவளிடம் அவன் ரொம்பவும் நெருங்க விரும்பவில்லை. ஆனால் நெருங்கிக் கொண்டிருப்பதை உணர்ந்தான். இது என்ன காதலா? அல்லது இயல்பான உடற்கவர்ச்சியா? ஒரு பெண்ணைக் காதலிப்பது தனக்குச் சாத்தியமா? காதல் என்பது மனம் சம்பந்தப்பட்டது. அவன் மனசுக்கு இன்னும் உயிர் இருக்கிறதா? அதற்குக் காதல் என்னும் பசி இருக்குமா? காதலித்தால் ஜீரணமாகுமா? ஒன்றுமே புரியவில்லை.

ஆனால், உடம்பின் தேவைக்குத் தீனி போடுவது அவனுக்குத் தவிர்க்க முடியாததாகி விட்டிருந்தது. மாதமாகிச் சம்பளம் கைக்கு வந்ததும் யாரோ ஒரு ராணியோ, மேரியோ அவனுக்குத் தேவைப்பட்டார்கள். அவள் ராணியா, மேரியா என்பது பற்றிக் கவலையில்லை. பசி தீர்க்க ஒரு பெண் வேண்டும். அவள் ராணியாக இருக்கலாம்; மேரியாக இருக்கலாம்; ஏன், பாக்யலட்சுமியாகக் கூட இருக்கலாம்.

அப்படியானால், ராணியும் மேரியும் பாக்யலட்சுமியும் ஒன்றா? ராணியின் மீதும், மேரியின் மீதும் அவன் கொண்டிருக்கும் மோகமும், பாக்யலட்சுமியின் மேல் கொண்டிருக்கும் ஈடுபாடும் ஒன்றுதானா? அவனுக்குக் குழப்பத்தில் தூக்கம் வந்தது...

தூக்கத்திலும் பாக்யலட்சுமிதான் வந்தாள்.

**மீ**ண்டும் விழித்துக் கொண்ட போது இருட்டத் தொடங்கியிருந்தது. கிட்டத்தட்ட அன்றைய பொழுது முடிந்து விட்டது. இனி அடுத்த ஞாயிறை எதிர் நோக்கிக் காத்திருக்க வேண்டும்.

அறையைப் பூட்டி விட்டுப் படியிறங்கிச் சாலையில் நடந்தான். திடீரென லாரியின் ஹாரன் ஓசை மிக அருகாமையில் கேட்டது. திடுக்கிட்டு, ரோட்டின் ஓரம் கொட்டியிருந்த ஜல்லியின் மேல் ஏறினான். பின்னால் ஏதேதோ குழப்பமான கலவையாகச் சைக்கிள் பெல், ஸ்கூட்டர் சப்தம்... ஏதோ இடித்தது போல் தோன்ற - ஒரு வேளை பித்த மயக்கம்தானோ - தடுமாறி ரோட்டில் விழுந்தான். லாரியின் சக்கரங்கள் அழுத்தமாகக் கிறீச்சிட்டு, அவனது தலைக்கு அரை அடி தூரம் இருக்கும் போது, தரையை ஒட்டி நின்றது.

சூழ்நிலையை உணர நீண்ட நேரம் ஆனது. மெல்லத் தடுமாறி எழுந்து நின்றான். யாரோ பின் மண்டையில் ஓங்கி அறைந்தார்கள். கலவையான குரல்கள்... ''போதை போட்டிருக்கான்.'' ''நல்ல வேளை நான்தான் தூக்கி விட்டேன். இல்லாங்காட்டி சட்னி ஆயிருப்பான்'', ''செத்த பய. என் வண்டிதான் கெடைச்சுதா?''

மனசு மரத்துப் போயிருந்தது. உணர்வுகள் இன்னும் சகஜ நிலைக்குத் திரும்பவில்லை. கை, கால்கள் தன்னிச்சையாக இயங்கிக் கொண்டிருந்தன. அதற்குள் நீண்ட தூரம் வந்து விட்டிருந்தான்... தெருவில் நடக்கும் போது எதையும் சிந்திக்கக் கூடாது என்று நினைத்துக் கொண்டான். ஆனால், அது முடிகிற காரியமில்லையே... மரணத்துக்குப் பக்கத்தில் போய் விட்டு வந்தது ஒன்றும் பெரிய அதிர்ச்சியை அவனிடத்தில் உண்டாக்கி விடவில்லை. ஆனால், நெஞ்சின் படபடப்பு சற்றே கூடியிருந்தது. சக்கரத்தில் மாட்டிக் கொண்டிருந்



''பழனி, ராணிப்பேட்டை தேர்தல் ரொம்ப கவர்ச்சிகரமானது.''
''எப்படி சொல்லுற?''
''அதுதான் 'இடை'த்தேர்தலாச்சே!''
- ராதாவாகதேவன்.

தால் நாளை கடுகாட்டில் ஒரு புதிய சமாதி உருவாகியிருக்கலாம்... ஜன்னல் வழியே பார்க்க அவன் இருக்க மாட்டான்...

பாக்யலட்சுமி கொஞ்ச நாள் வழியை வழியைப் பார்த்துக் காத்திருப்பாள். விவரம் தெரிந்தால் வருந்துவாள். அழுதாலும் அழுவாள். பின் மறந்து விடுவாள். அவள் என்ன அவனது மனைவியா, அல்லது காதலியா? அவனை மணக்கும் தகுதி அவளுக்கும் இல்லை; அவளை மணக்கும் தகுதி அவனுக்கும் இல்லை...

இதோ... பாக்யலட்சுமியின் வீடு வந்து விட்டது. முன் பக்கம் ஓட்டு வீடு போல் தோற்றம். பின்புறம் ஓட்டுக் கட்டடம். கேட்டுக்குள் நுழைந்து உள் கதவைத் தட்டினான். பாக்யலட்சுமியின் அம்மா கதவைத் திறந்தாள். அவனைப் பார்த்ததும் முகம் களித்தாள். ஏதோ சொல்ல வாயெடுத்தாள். அதற்குள். ''யாரது?'' என்ற குரல் உள் விருந்து கேட்டது. பாக்யலட்சுமி. அவன் உள்ளே சென்றான்.

''அட'' என்றாள் பாக்யலட்சுமி. கையில் கரண்டியுடன் சமையலறைக்குப் போனாள். ''என்ன இந் நேரத்திலே? உட்காருங்க'' என்றாள் போகிற போக்கில். ஓர் அறைக்குள் சென்று உட்கார்ந்தான். மேஜை மேல் கறுப்பு வெள்ளை டீவி இருந்தது. பாக்யலட்சுமி அவனை விட பல மடங்கு வசதியானவள். நிறைய வருமானம் வந்தது... பாக்யலட்சுமியின் அம்மா காரணமில்லாமல் அறைக்குள் தலைநீட்டி அவனை எட்டிப் பார்த்து விட்டுப் போனாள். அவளுக்கு ஏனோ அவனை கந்தமாகப் பிடிக்காது. 'பைசாவுக்குப் பிரயோசனமில்லாதவன். என் மகளின் பிழைப்பைக் கெடுக்கிறான்' என்று அவன் காதுபட முனகுவாள். ஆனாலும், மகளின் விருப்பத்தை மீறும் துணிவு அவளுக்கு இல்லை. மகளைச் சார்ந்துதான் அவள் இருந்தாள்.

கையில் காப்பி தம்ளருடன் பாக்யலட்சுமி உள்ளே வந்தாள். பக்கத்தில் வைத்து விட்டு, ஆணியில் மாட்டியிருந்த ஒரு பையை எடுத்தாள். ''எங்கே போறே?'' என்றான்.

''ரெண்டு முட்டை வாங்கிட்டு வந்திடறேன். ராத்திரி சாப்பாட்டுக்குத் தொட்டுக்க ஒன்றும் இல்லை'' என்றாள்.

''நான் இப்பக் கிளம்பிடறேன். எனக்கு ஒன்றும் வேணாம்.''

முறைப்பது போல் அலட்சியமாகப் பார்த்தாள். படு ஓரசான ஜாக்கெட்டில் சரியாகப் போடப்படாத முன்றானை ஃபேன் காற்றில் கழன்றது. தலை முடியைப் பின்புறம் சேர்த்துக் 'குதிரைவால்' கட்டியிருந்தாள்.

''சாதமும் ரசமும் இருக்கு. நீங்க வருவீங்கன்னு நான் எதிர்பார்க்கலை. முட்டை பொரியல் பண்ணிடறேன். சாப்பிட்டுட்டுத் தான் போகணும்'' என்றபடி வெளியேறினாள்.

அவன் எப்போது வந்தாலும், சாப்பிடாமல் அனுப்ப மாட்டாள். ஒருமுறை அவன் வந்த போது, ராத்திரி எட்டு மணி. மத்தியானம் சமைத்திருந்த ஆட்டுக்கறி குழம்பை சூடுபண்ணி அவனுக்குப் போட்டாள். அவன் ரசமும், மோரும் போட்டுச் சாப்பிட்டான். சாப்பிட்ட சற்று நேரத்திற்கெல்லாம் அவனுக்கு வாந்தியும், பேதியும் ஆரம்பித்து விட்டது. அடுத்த ஒரு மணி நேரத்தில் ஏழெட்டு முறை போய் விட, இறங்கி விட்டான்.

நாலு நாள் ஆஸ்பத்திரியில் கூடவே இருந்தாள். ''ஃபுட் பாய்ஸன்'' என்றார் டாக்டர். ''எல்லாம் என் முட்டாள்தனம். நல்லவேளை பிழைச்சிட்டீங்க'' என்று கண் கலங்கினாள்.



நிருபர் : உங்க உண்ணாவிரதத்தைச் சொன்ன தேதிக்கு முன்னயே முடிச்சிட்டீங்களே.... ஏன்?

அரசியல்வாதி : அஜீரணத் தொந்தரவு அதிகமா போயிடுச்சி, அதான்!

- இரா. வசந்தராசன்.

திரும்பி வந்தவள், முட்டையையும், வெங்காயத்தையும் தரையில் வைத்து விட்டு, பையைப் பழையபடி ஆணியில் மாட்டினாள். ''நீ இந்த டிரெஸ்லோடதான் கடைக்குப் போயிட்டு வந்தியா?'' என்றான். அவன் கண்களில் கோபமும், எரிச்சலும் தெரிந்தன.

அவள் அதிர்ச்சியடைந்தாற்போல் பார்த்தாள். ''ஏன், இந்த ட்ரெஸ்ஸுக்கு என்ன?'' என்று குனிந்து தன்னையே ஒரு முறை பார்த்துக் கொண்டாள். ஒரு நிமிடகனத்த மௌனம் அவர்களைக் கடந்தது.

''சரி, சரி.. இனிமே இப்படிப் போக மாட்டேன். இந்த வெங்காயத்தைக் கொஞ்சம் உரிக்கக் குடுங்க'' என்று கூறி விட்டு அறையை விட்டு வெளியேறினாள்.

தரையில் சப்பணமிட்டு அமர்ந்து வெங்காயத்தை உரிக்கத் தொடங்கினான். அவளை அதட்ட தனக்கு அதிகாரமிருக்

இறதா என்று சிந்தித்தான். இல்லையென்றால் அவள் ஏன் கட்டுப்பட வேண்டும்? அவளுக்கும், தனக்கும் இடையில் என்ன பந்தம் இருக்கிறது? அவள் ஏன் தனக்குச் சமைத்துப் போட வேண்டும்? தான் ஏன் அவள் வீட்டில் உட்கார்ந்து வெங்காயம் உரித்துத் தர வேண்டும்? காரம் தாங்காமல் கண் எரிந்தது...

கையில் அரிவாள்மணையுடன் உள்ளே வந்த பாக்யலட்சுமி, கலங்கி நீர் கசிந்த அவனது கண்களைக் கண்டதும் சிரித்தாள். ''நீங்க வெச்சிடுங்க. நான் வந்து உரிச்சுக் கறேன்'' என்றபடி அரிவாள்மணையை ஓரமாக வைத்தாள். கையிலிருந்த ஒரு சின்னப் பொட்டலத்தைப் பிரித்து விபூதி, குங்குமம் எடுத்து அவன் நெற்றியில் இட்டாள். ''காலைல கோயிலுக்குப் போயிட்டு வந்தேன்'' என்றாள்.

''கோயிலுக்கெல்லாம் கூட நீ போறதுண்டா?'' அவனது கேள்வியில் அவள் சுருண்டு போனாள். ''ஏன், போகக் கூடாதா?'' என்று கோபத்துடன் கேட்டு விட்டு சடாரெனத் திரும்பிப் போன வேகத்தில், அவளது அழுகை புரிந்தது. அவனுக்கு மனசில் 'சுருக்'கென்று குத்தினாற்போல் வலித்தது. கேட்டிருக்கக் கூடாது. மீறி வந்து விட்ட கேள்வி. அவளது அழுகை அவனுக்குத் துன்பம். சற்று முன் லாரியின் முன்னால் விழுந்த போது இந்தத் துன்பம் இல்லை. மனசில் இந்த 'சுருக்' இல்லை.

ஏதோ தோன்ற, எழுந்தான். அறையை விட்டு வெளியே வந்தான். பாக்யலட்சுமியைக் காணவில்லை. சமையலறையில் புகைந்தது. வீட்டுக்கு வெளியே வந்தான். செருப்பைக் காலில் மாட்டிய போது பாக்யலட்சுமி உள்ளிருந்து வருவது தெரிந்தது. அருகில் வந்து, ''என்ன?'' என்றாள். சட்டென்று அவனது கைகளை இறுகப் பிடித்துக் கொண்டான்... ''மன்னிச்சிடு'' என்றான். ''சே!'' என்ற ஒரே வார்த்தையுடன் அவனை உள்ளே அழைத்துச் சென்று கட்டிலில் மீண்டும் அமர வைத்தாள். ஏதோ நினைத்துக் கொண்டாற்போல் சென்று தெருக் கதவை சாத்தித் தாழிட்டு வந்தாள். பின், சலனமில்லாமல் ஒரு பார்வை பார்த்து விட்டு மீண்டும் சமையலறைக்குள் போய் விட்டாள்.

**சா**ப்பிடும் போது பக்கத்தில் அமர்ந்து விசிறினாள். மேலே ஃபேன் சுற்றிக் கொண்டிருந்தது. அவன் அம்மா அப்படித்தான் ஃபேன் ஓடும்போதே விசிறுவாள். கிழவியும் அப்படித்தான் விசிறும். தலைகுனிந்து மௌனமாய்ச் சாப்பிட்டான்.

''நான் இன்னிக்கு செத்திருக்கப் பார்த்தேன்'' என்றான் திடுமென்று. அவள் விசிறுவதை நிறுத்தினாள். முகத்தில் பயம் தெரிந்தது.

''லாரி முன்னால விழுந்திட்டேன்'' என்று கூறிவிட்டு, சோற்றை அள்ளி விழுங்கினான். அவள் பதில் பேசாமல் சோற்றை அள்ளித் தட்டில் போட்டாள். சாப்பிட்டு முடித்துக் கையைக் கழுவி விட்டு வந்த போது, அவன் சாப்பிட்ட தட்டிலேயே அவள் சாப்பிட்டுக் கொண்டிருந்தாள்.

அறைக்குள் சென்று உட்கார்ந்தான். சற்று நேரத்தில் அவள் வந்தாள். ''அதுக்கப்புறம் என்ன ஆச்சு?'' என்றாள் மென்மையாக.

''காலைலேர்ந்து பித்த மயக்கம். கால் தடுமாறிட்டது. அதான்'' என்றான்.

''வந்ததுமே சொல்லியிருந்தா இஞ்சி அரைச்சுக் குடுத்திருப்பேனே, இப்ப தரட்டுமா?'' என்று எழுந்தாள்.

''வேண்டாம். இப்ப தேவலை. நான் கிளம்பறேன்...'' அவன் எழ முயன்றான்.

''ஏன், இப்பப் போய் வேற ஏதாச்சும் ரயில் முன்னால விழணுமா? படுத்திருந்து காலைல போங்க'' என்றபடி தோளில் கை போட்டு அவனை அணைத்துக் கொண்டாள்.

அவளது கைகளை மெல்ல விலக்கினான். ''காலைலேர்ந்தே மனசு சரியில்லை. அதான் கம்மா உன்னைப் பார்த்திட்டுப் போகலாம்னு வந்தேன்'' என்றான். ''மாசக் கடைசி வேற... உனக்குத் தரக்கூட கையில் காசில்லே. நான் கிளம்பறேன்'' என்றவனைத் தீர்க்கமாகப் பார்த்தாள். பார்வையில் வெறுப்பு கொப்பளித்தது.

''உங்ககிட்டே எப்பவாச்சும் நான் பணம்தாங்கன்னு கேட்டிருக்கேனா? நான் அப்படிப்பட்டவதான். ஆனால், நான் உங்களை எல்லோரையும் போல் நினைக்கலை. நான் ஒரு பாவப்பட்ட ஜன்மம்... உடம்பாலதான் ஒருத்தன் கூட வாழக் குடுத்து வைக்கலை. மனசாலயாவது உங்க கூட வாழ்ந்திட்டிருக்கேன். உங்களைப் போல வேற யாருக்கும் நான் சமைக்கப் போட்டதில்லை... துணி துவைக்கப் போட்டதில்லை. சே!'' என்றவள் சரேலென்று எழுந்து கொண்டாள். ''போறதுன்னா போங்க'' என்று வெடுக்கென்று கூறிவிட்டு அறையை விட்டு வெளியேறினாள்.

அவளது நிஜப் பிரவாகம் அவனை மூச்சுத் திணறச் செய்தது. அவள் தன்னிடம் எதைக் கண்டு சரணடைந்தாள் என்று அவனுக்குப் புரியவில்லை. ஆனால், அவளது தேடல் எதுவென்று அவனுக்குப் புரிந்தது.

அவன் மனம் நிறைந்து, கனத்து, கண்களில் நீர் துளித்தது. மெல்ல எழுந்து அவளைத் தேடி சமையலறைக்குள் நுழைந்தான்...

## 21. வண்டி வந்தது!

சமையலறையில் மங்களமும், சொர்ணம்மாளும் குஞ்சாலாடு பிடித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்குப் பக்கத்தில் செவிட்டு வைத்தி, புதுவேஷ்டி-புதுப் புடைவைப் பொட்டணங்களைப் பிரித்து வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். புது வேஷ்டி-புதுப் புடைவைகளை அவன் கையால் தடவித் தடவிப் பார்த்து அவற்றின் மிருதுத் தன்மையை அநுபவித்துக் கொண்டிருந்தான்.

சொர்ணம்மாள், ''நான் சொன்னபடியே ஆச்சா, இல்லையா, பார்த்துக்கோ! பொண்ணுக்கு அறுபது ரூபாய்க்குப் புடைவை, உனக்குப் பன்னிரண்டு ரூபாயிலே புடைவை. மாப்பிள்ளைக்கு முப்பத்தைந்து ரூபாயிலே வேஷ்டி; மச்சினனுக்கு ஒன்னரை ரூபாயிலே வேஷ்டி. இதென்ன வெட்கக் கேடு! உடம்புக்குப் பால் குடிக்காட்டாலும், ஊருக்காவது குடிக்க வேண்டாமா? நீயும் பேசாம இருக்கயே?'' என்றாள்.

அதற்கு மங்களம், எரிச்சலாக, ''என்னை என்னடி அம்மா பண்ணச் சொல்றே! அப்பவே கிணத்துலே குளத்திலே என்னைப் பிடிச்சுத் தள்ளி விட்றது தானே? இந்த அழகான மாப்பிள்ளையைப் பார்த்து நீதானே என்னைக் கொண்டு வந்து கொடுத்தே?'' என்றாள்.



# தியாக பூமி

''நான் எல்லாம் சரியாத்தான் பார்த்துக் கொடுத்தேன். எதிலே குறைவாய்ப் போச்சு? சொத்தில்லையா, பணமில்லையா, வயதுதான் அப்படி ரொம்ப ஜாஸ்தியா? உன்னைப் போலே இளையாளா வாழ்க்கைப்பட்டவாளெல்லாம் ராஜாத்தி மாதிரி இருக்கலையா? நீ எல்லாத்துக்கும் வாயை மூடிண்டு இருந்து இருந்துதான் இப்படி இடங்கொடுத்துப் போச்சு, இல்லாட்டா, ஒரு பொண் கல்யாணத்துக்கு யாராவது பத்தாயிரம் ரூபாய் செலவழிப்பாளோ?''

''அதோடே போனாத் தேவலையே? இப்போ, அவா கல்கத்தாவிலிருந்து தீபாவளிக்கு வந்துட்டுப் போற செலவெல்லாம் உன் மாப்பிள்ளைதான் கொடுக்கப் போறாராம்!''

''ஐயையோ! நெஜந்தானாடி? இதென்ன அநியாயம்? இந்தக் குடித்தனம் உருப்படறதா, இல்லையா, தெரியலையே? இன்னும், திரட்சி, வளைகாப்பு, சீமந்தம்னு நெடுக வந்துண்டேயிருக்குமே?''

''கல்யாணத்திலே பத்தாயிரம் ரூபாய் கடன். நிலத்திலே இரண்டு வேலி மண்ணடிக்கப் போயிடுத்து. ஐயாயிரம் ரூபாய் செலவழிச்சாத்தான் மறுபடி நிலமாகுமாம். எப்படிக் கடனடைக்கப் போகிறாரோ, பாக்கி



என்ன மிஞ்சப் போறதோ, ஸ்வாமிக்குத் தான் தெரியும்.''

''நான் சொல்றேன், கேளு, மங்களம்! இத்தனை நாளும் போனதெல்லாம் போகட்டும். இனிமே, பொட்டிச் சாவியை நீ வாங்கி வைச்சுக்கோ. ஒரு காலணாச் செலவழிக்கிறதாயிருந்தாலும், உன்னைக் கேட்டுண்டு தான் செலவழிக்கணும்னு சொல்லிடு. இல்லாட்டா எல்லாருமாச் சந்தியிலே நிக்க வேண்டியதுதான்.''

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருக்கையில், செவிட்டு வைத்தி புடவைகளையும், வேஷ்டிகளையும் ஒவ்வொன்றாய்ப் பிரித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். நடுவில், நடுவில், ''அக்கா! இது யாருக்கு? இது உனக்கா? இதுதான் மாப்பிள்ளைக்கா?'' என்று கேட்டுக் கொண்டிருந்தான். மாப்பிள்ளைக்கு வாங்கியிருந்த சேலம் மயில்கண் வேஷ்டியைப் பார்க்கப் பார்க்க, அதைத் தான் உடுத்திக் கொண்டால் எப்படியிருக்குமென்று அவனுக்கு யோசனை தோன்றி விட்டது. வேஷ்டியை ஒவ்வொரு மடிப்பாகப் பிரித்து, கடைசியில் இரட்டை மடிப்புக்கு வந்ததும், எழுந்து நின்று அதைக் கட்டிக் கொள்ள முயன்றான்.

இந்தச் சமயத்தில், ஆலாத்திக்கு மஞ்சள் நீர் கரைத்து வைத்திருக்கிறதா என்று விசாரிப்பதற்காகச் சாவித்திரி அங்கே வந்து சேர்ந்தாள். ''ஏன், சித்தி! வண்டி வரலாச்சே...'' என்று சொல்லிக் கொண்டே வந்தவள், மாப்பிள்ளைக்கு வாங்கியிருந்த வேஷ்டியைச் செவிட்டு வைத்தி கட்டிக் கொள்வதைப் பார்த்ததும், மற்றதையெல்லாம் மறந்து விட்டாள்; இரண்டே எட்டில் செவிட்டு வைத்தி அருகில் சென்று, ''சீ'' என்று ஓர் அதட்டல் போட்டு, அவன் உடுத்திக் கொள்ள முயன்ற வேஷ்டியைப் பிடுங்கினாள்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த சொர்ணம்மாளுக்கு வயிற்றெரிச்சல்

பொங்கிக் கொண்டு வந்தது. ''ஏண்டி சாவித்திரி! உனக்கு என்னடி வந்துடுத்து இவ்வளவு ராங்கி! அந்த வேஷ்டியை அவன் பார்த்தா ஊசியா போயிடும்? இல்லாட்டா, அவன் தொட்டாத் தீட்டுப்பட்டுப் போயிடுமா? அவனைச் சாதியை விட்டுத் தள்ளி வச்சிருக்கா?'' என்றாள்.

இந்த வார்த்தைகள் சாவித்திரியின் செவியில் சுருக்கென்று பாய்ந்தன. ஊரார் தங்களைச் சாதிப் பிரஷ்டம் பண்ணியிருப்பதைத்தான் பாட்டி அந்த மாதிரி கட்டிக் காட்டுகிறாள் என்று அவளுக்குத் தெரிந்தது. ஆனால், அதற்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. ஆத்திரம் தொண்டையை அடைக்க, நாத் தழுதழுக்க, ''இந்தாருங்கோ, பாட்டி! என் புடைவையை வேணாலும் சித்தி எடுத்துக்கட்டும். எனக்குப் புதுப் புடைவை வேணுங்கறது இல்லை. ஆனால், அவாளுக்கு வாங்கியிருக்கிற வேஷ்டியை இன்னொருத்தர் கட்டிக்கிறது எனக்குக் கொஞ்சங் கூடப் பிடிக்கலை'' என்று சொல்லி விட்டு, வைத்தியிடமிருந்து பிடுங்கிய வேஷ்டியை எடுத்துக் கொண்டு விரைவாக அங்கிருந்து சென்றாள்.

மங்களம், போகின்றவளை ஒரு தடவை விழித்துப் பார்த்து விட்டு, ''ஸ்வாமி! பகவானே! இன்னும் என்னவெல்லாந்தான் என்னைச் சோதிக்கப் போகிறாயோ?'' என்று சொல்லி, ஒரு குஞ்சலாடுவை முழுசாக எடுத்து வாயில் போட்டுக் கொண்டாள்.

காமரா உள்ளில் சாவித்திரி, மாப்பிள்ளையின் வேஷ்டியை மடித்துக் கொண்டிருந்தாள். பிரித்தது தெரியாதபடி முன்போலவே மடிக்க அவள் பிரயாசைப்பட்டாள். அவள் கடைசி மடிப்பு மடித்துக் கொண்டிருந்த போது, வாசலில் வண்டிச் சப்தம் கேட்டது. 'ஓகோ! வண்டி வந்துடுத்து போலிருக்கே! ஆலாத்தி தயாராயிருக்கிறதோ என்னமோ தெரியலையே?' என்று எண்ணியவண்ணம், வேஷ்டியை அப்படியே வைத்து விட்டு அறையிலிருந்து வெளியில் வந்தாள்.

"என்னது, பக்கத்து வீட்டுக்காரர் என்கிட்டேயே 'பேப்பரை' தரச் சொல்லிட்டாரா, ஏன்?"

பேப்பர் போடும் பையன் : அவங்க 'காபி' சாப்பிடும் டயத்திற்குப் போயிடறீங்களாம்... ஏதாவது ஒரு 'ஓசி'யோட போகட்டுமேன்னுதானாம்...!

- ஆர். வசந்தகுமார்



அப்போது வண்டிச் சப்தத்தை மங்களமும் கேட்டு, கையில் மஞ்சள் நீருள்ள தாம்பாளத்தை எடுத்துக் கொண்டு சமையலறையிலிருந்து கிளம்பினாள். ஆனால், அதே சமயத்தில் குறுக்கே வந்த செவிட்டு வைத்தியின் காதில் வண்டிச் சப்தமும் கேட்கவில்லை; இவர்கள் எழுந்து வருவதையும் அவன் பார்க்கவில்லை. 'சாவித்திரியை மட்டும் நமக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுத்திருந்தால் இப்படி அவள் துடுக்காக இருப்பாளா?' என்று எண்ணிய வண்ணம், ஆகாசத்தைப் பார்த்துக் கொண்டு நடந்தவன், கையில் ஆலாத்தியுடன் வந்த மங்களத்தின் மீது மோதிக் கொண்டான். ஆலாத்தித் தாம்பாளம் கீழே 'டணார்' என்ற சப்தத்துடன் விழுந்தது. ''ஐயையோ'' என்றாள் மங்களம்.

சாவித்திரி இந்தக் காட்சியைப் பார்த்து விட்டு, 'நல்ல சமயத்தில்தான் இவர்கள் இப்படிச் செய்வார்கள்' என்று மனத்திற்குள் வைத்தியையும் மங்களத்தையும் வைது கொண்டே, ரேழிப் பக்கம் சென்று, கதவோரத்தில் நின்று பார்த்தாள். வாசலில் வண்டி வந்து நின்றது. அதனுள்ளிருந்து, சம்பு சாஸ்திரி இறங்கினார்; அடுத்தாற்போல் மாப்பிள்ளை இறங்குவாரென்று சாவித்திரி பதைபதைப்புடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். அவர் இறங்குவதைப் பார்த்து விட்டுத் தான் உள்ளே ஓடிப் போவதற்கு அவள் தயாராயிருந்தாள். ஆனால், சம்பு சாஸ்திரிக்குப் பிறகு யாரும் வண்டியிலிருந்து இறங்கவில்லை. வண்டி 'கடக் கடக்' என்ற சப்தத்துடன் ஒரு வட்டம் அடித்து விட்டுத் திரும்பிச் சென்றது.

வண்டியிலிருந்து இறங்கிய சாஸ்திரி வீட்டுக்குள் பிரவேசித்தார். சாவித்திரி அவருக்கு முன்னாலேயே உள்ளே சென்று கூடத்தில் நின்றாள். சாஸ்திரி வந்ததும் அவருடைய முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள். சாஸ்திரி, அவளுடைய பரிதாபமான முகத்தைப் பார்த்து விட்டு, தழதழுத்த குரலில், ''மாப்பிள்ளை வரவில்லை, அம்மா!'' என்று சொன்னார். அப்போது அவர் கண்களிலிருந்து ஜலம் பெருகிற்று.

சாவித்திரி, ''நீங்கள் என்ன செய்வேள், அப்பா! அழாதேங்கோ, அப்பா!'' என்றாள். அவ்வளவுதான்; அவளுக்கும் தன்னை அறியாமல் துக்கம் பொங்கிக் கொண்டு வந்து விட்டது. எவ்வளவு அடக்கிப் பார்த்தும் முடியவில்லை. விம்மிக் கொண்டே அங்கிருந்து சென்று தாழ்வாரத்தில் போட்டிருந்த கயிற்றுக் கட்டிலின் அருகில் போய் மண்டியிட்டுக் கொண்டு உட்கார்ந்தாள். கட்டிலில் முழங்கையை ஊன்றிக் கொண்டு தேம்பித் தேம்பி அழுதாள்.

சாஸ்திரி அவளைப் பின்தொடர்ந்து வந்து, அவளுடைய தலையைத் தம் கைகளால் தடவிக் கொடுத்துக் கொண்டு நின்றார்.

வீட்டு முற்றத்தில் கூடல்வாய் முனையி லிருந்து மழை ஜலம் சொட்டுச் சொட் டென்று விழுந்து கொண்டிருந்தது.

வீட்டுக்கு வெளியே, மழைக் காலத்துத் தவளைகள் ஏகமாய்ச் சப்தம் போட்டுக் கொண்டிருந்தன. அந்தச் சப்தம், சோகக் குரலில், ''மாப்பிள்ளை வரலை!'' ''மாப் பிள்ளை வரலை!'' என்று கதறுவது போல் இருந்தது.

## மூன்றாம் பாகம்

### பனி

*'புல் நுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி*
*இன்னினியே செய்க அறவினை.'*
*- நாலடியார்.*

## 22. நல்ல சேதி

தலை தீபாவளிக்குப் பிறகு இன்னும் இரண்டு தீபாவளிகள் வந்து விட்டுப் போயின. கார்த்திகை முடிந்து, மார்கழி மாதம் பிறந்தது.

பருவ காலங்கள் எந்தப் பஞ்சாங்கம் அல்லது காலெண்டரை வைத்துக் கொண்டு தேதி பார்க்கின்றனவோ, தெரியவில்லை. அதிலும் மற்றப் பருவங்கள் கொஞ்சம் முன் பின்னாக வந்தாலும் வரும். பனிக் காலம் மட்டும் தேதி தவறி வருவது கிடையாது. கார்த்திகை எப்போது முடியப் போகிறது, மார்கழி எப்போது பிறக்கப் போகிறது என்று பார்த்துக் கொண்டேயிருந்து மார்கழி பிறந்ததும், பனியும் தொடங்கி விடுகிறது. ஜனங்களும், கம்பளிச் சொக்காய், பனிக் குல்லாய், காஷ்மீர்ச் சால்வை, கோரைப் பாய் ஆகியவற்றைத் தேடத் தொடங்கு கிறார்கள்.

அந்த மாதங்களில் அதிகாலையில் எழுந்திருப்பதற்குச் சாதாரணமாய் யாருக் கும் மனம் வருவதில்லை. பட்சிகளின் உதய கீதத்தைக் கேட்டதும் போர்வையை இழுத் துப் போர்த்திக் கொள்ளத்தான் தோன்றும். ஆனால், மார்கழி மாதம் மதி நிறைந்த நன் னாள் என்பதை நினைத்து அதிகாலையில் பஜனை செய்ய விரும்பும் பக்தர்களும், குடுகுடுப்பாண்டிகளும் மட்டும், பனியை யும் குளிரையும் இலட்சியம் செய்யாமல் எழுந்து விடுவார்கள்.

ஒருநாள் அதிகாலையில் சம்பு சாஸ்திரி வழக்கம்' போல் விழித்துக் கொண்டார். ஆனால், உடனே படுக்கையிலிருந்து எழுந் திருக்கவில்லை. அவசரமாய் எழுந்து என்ன ஆக வேண்டுமென்று தோன்றியது. மூன்று வருஷத்துக்கு முன்பு வரையில் மார்கழி மாதம் என்றால், நெடுங்கரை கிராமத்தில்



உலக மக்களால் வீசியெறியப்படும் பிளாஸ்டிக் கழிவுப் பொருட்களால் விளையும் பயன் என்ன தெரியுமா? ஆண்டுதோறும் கடலில் போய்ச் சேரும் பிளாஸ்டிக் குப்பைகளில் சிக்கி மூச்சுத் திணறி இறந்து போகும் கடல் பறவைகளின் எண்ணிக்கை சுமார் 70 இலட்சம்! அழியும் கடல்வாழ் பாலூட்டிகளின் எண்ணிக்கை சுமார் 1,00,000!

ஆதாரம் : யுனெஸ்கோ கூரியர்
தகவல் : எஸ். ஆலன்

பிரமாதமாயிருக்கும். அதிகாலையில் வீதி பஜனை நடக்கும். பிறகு சம்பு சாஸ்திரியின் வீட்டில் பூஜை ஹாரத்தி, பொங்கல் பிரஸாத விநியோகம் எல்லாம் உண்டு. அதெல்லாம் இப்போது பழைய ஞாபகமாகி விட்டது. சாஸ்திரியைச் சாதிப் பிரஷ்டம் செய்த வரு ஷத்தில், வீதி பஜனை நின்று போயிற்று. காலை வேளையில் பொங்கல் பிரஸாதத் துக்காகவும் அவர் வீட்டுக்கு யாரும் போக வில்லை. 'ஊரார் சாதிப் பிரஷ்டம் பண்ணி யது இந்த ஒரு காரியத்துக்கு நல்லதாய்ப் போயிற்று' என்று மங்களம் மனதிற்குள் எண்ணிக் கொண்டாள்.

அடுத்த வருஷத்தில் சாதிக் கட்டுப்பாடு தளர்ந்து விட்டது. ஊரில் தீக்ஷிதருடைய கிருத்திரிமங்களைப் பொறுக்க முடியாத சிலர் பகிரங்கமாகவே சம்பு சாஸ்திரியின் கட்சி பேசத் தொடங்கினார்கள். பிறகு, பெயருக்கு ஏதோ பிராயச்சித்தம் என்று நடந்தது. இப்போது அக்கிரகாரத்தில் அநே கர் சாஸ்திரி வீட்டுக்கு வந்து போய்க் கொண் டிருந்தார்கள்.

ஆனால், முன்னைப் போல் சம்பு சாஸ் திரிக்கு வாழ்க்கையில் உற்சாகம் இல்லை; முன் மாதிரி பணச் செலவு செய்வதற்கு வேண்டிய வசதிகளும் இல்லை. சாவித்திரி, புருஷன் வீட்டுக்குப் போகாமலிருந்தது அவருடைய உள்ளத்தில் ஒரு பெரிய பார மாய் இருந்து கொண்டிருந்தது. ஆகவே, ஏகாதசி பஜனை, மார்கழி பஜனை எல்லாம் நின்று போயின.

ஆனால் சாஸ்திரி அதிகாலையில் எழுந் திருப்பது மட்டும் நிற்கவில்லை. தாம் எழுந் திருக்கும் போது, சாவித்திரியையும் எழுப்பி விட்டு விட்டுத் தடாகத்துக்குப் போவார். பனிக்காலத்தில், அதிகாலையில் வெதவெத என்று சூடாயிருக்கும் குளத்து ஜலத்தில் ஸ்நானம் செய்வது ஓர் ஆனந்தமாயிருக்கும். பிறகு, சூரியோதயம் வரை காத்திருந்து சூரிய நமஸ்காரம் செய்வார். பனிக்காலத் தில், சூரியன் கிளம்பிக் கொஞ்சநேரம் வரை யில் பனிப் படலம் சூரியனை மறைத்துக் கொண்டிருக்கும். 'இப்படித்தானே மாயை

யாகிற பனி ஆத்ம சூரியனை ஜீவனுடைய கண்ணுக்குப் புலப்படாமல் மறைத்துக் கொண்டிருக்கிறது?' என்று வேதாந்த விசாரணை செய்வார்.

அவர் வீட்டுக்குத் திரும்பி வருவதற்குள், சாவித்திரி எழுந்திருந்து, படங்களுக்கு அலங்காரம் செய்து, விளக்கேற்றி வைத்து, பூஜைக்கு எல்லாம் எடுத்து வைத்திருப்பாள். சாஸ்திரி வந்ததும் பூஜை செய்து விட்டு வேறு காரியங்களைப் பார்ப்பார்.

இன்று, வழக்கம் போல், அதிகாலையில் விழித்துக் கொண்டவர், பழைய நாளில், மார்கழி பஜனை எவ்வளவு விமரிசையாய் நடந்தது என்பதைப் பற்றிச் சிறிது நேரம் சிந்தனை செய்து கொண்டிருந்தார். பிறகு, ஒரு பெருமூச்சு விட்டு விட்டு, ''அம்மா! சாவித்திரி! எழுந்திரு, அம்மா!'' என்றார். அதே சமயத்தில், மனத்திற்குள், 'ஐயோ!' இந்தக் குழந்தையின் கஷ்டம் எப்போது தீரப் போகிறதோ, தெரியவில்லையே!' என்று ஏங்கினார்.

அப்போது வாசலில், குடுகுடுப் பாண்டி, ''நல்ல சேதி வருகுது, நல்ல சேதி வருகுது! குடுகுடுக் குடுகுடுக்! ஐயா வீட்டுக்கு நல்ல சேதி வருகுது!! குடுகுடுக் குடுகுடுக்!'' என்று சொல்லிக் கொண்டு போனான்.

சாஸ்திரியின் குரலைக் கேட்டுச் சாவித்திரி மட்டும் விழித்துக் கொள்ளவில்லை; மங்களமும் விழித்துக் கொண்டாள். அவள் எழுந்து போகையில், ''நல்ல சேதி வரும், நல்ல சேதி வரும்னு இரண்டு வருஷமாத்தான் காத்திண்டிருக்கு. வந்த பாட்டைக் காணோம், இந்தத் துக்கிரியின் தலையிலே பகவான் என்ன எழுதியிருக்காரோ?'' என்று சொல்லிக் கொண்டே போனாள்.

''ஹே ராமச்சந்திரா!'' என்றார் சாஸ்திரியார். பிறகு, ''அவள் கிடக்கா, குழந்தை! நீ போய்ப் பூஜைக்கு ஆக வேண்டியதைப் பார்!'' என்றார்.

**சா**வித்திரி புருஷன் வீட்டுக்குப் போகாமலிருப்பது பற்றி மங்களம் இடித்துக் காட்டியது இது முதல் தடவையல்ல; எத்தனையோ தடவை அவள் இந்த மாதிரி சொல்லிச் சொல்லிச் சாவித்திரிக்குக் காய்த்துப் போயிருந்தது. எனவே, சாதாரணமாக அவள் அதை இலட்சியம் செய்வதில்லை. ஆனால், இன்றைய தினம் அவளுடைய மனம் ரொம்பவும் புண்பட்டுப் போயிற்று. ஏனெனில், வாசலில் குடுகுடுப்பாண்டி, ''நல்ல சேதி வருகுது; நல்ல சேதி வருகுது!'' என்று கூவிய போது, மங்களத்துக்குத் தோன்றிய அதே எண்ணம் சாவித்திரிக்கும் தோன்றியது. 'ஒருவேளை இன்றைக்கு நல்ல சேதி வரக் கூடாதா? என்னை அனுப்பி வைக்கும்படி அவாளிடமிருந்து கடிதம் வரக் கூடாதா?' என்று அவள் மனம் ஏங்கிற்று. அந்தச் சமயத்தில் மங்களம் அம்மாதிரி இடித்துக் காட்டியபடியால் சாவித்திரிக்குத் துக்கம் அடைத்துக் கொண்டு வந்தது.

முடிந்த வரையில் துக்கத்தை அடக்கிக் கொண்டு சாவித்திரி தந்தையின் பூஜைக்கு ஆக வேண்டிய காரியங்களைப் பார்த்தாள். பிறகு வீட்டு வேலைகளையும் செய்தாள். எல்லாம் ஆன பிறகு, காமரா உள்ளுக்குப் போய்க் காகிதம், பேனா, மைக்கூடு எடுத்து வைத்துக் கொண்டு கடிதம் எழுதத் தொடங்கினாள்.

யாருக்குக் கடிதம் எழுதினாள் என்று சொல்லவும் வேண்டுமா? காரியம் செய்யும் போதும், கதை கேட்கும்போதும், கடவுளைத் தியானிக்கும் போதும், உண்ணும் போதும், உறங்கும் போதும் யாருடைய நினைவாகவே இருந்தாளோ, அந்த மகா-ஸ்ரீ ஸ்ரீதரன் பி.ஏக்குத்தான்.

''என் உயிருக்குயிரான பிராணநாதருக்குத் தங்கள் அடியாள் சாவித்திரி அனந்த கோடி நமஸ்காரம்...''

இப்படி எழுதிச் சாவித்திரி நிறுத்தினாள். இதுவரையில் இம்மாதிரி எத்தனை கடிதம் எழுதியிருக்கிறோம் என்பது ஞாபகம் வந்தது. குறைந்தது, பத்துப் பன்னிரண்டு கடிதங்கள் இருக்கும். அவையெல்லாம் என்ன ஆயின?

மங்களம் அதிகாலையில் சொன்னது ஞாபகம் வந்தது: ''இந்தத் துக்கிரியின் தலையெழுத்து எப்படி இருக்கிறதோ?'' ஆமாம்; இந்தத் துக்கிரி ஜன்மத்தின் தலையெழுத்து சரியாயில்லாத போது, எத்தனை கடுதாசி எழுதித்தான் என்ன பிரயோஜனம்?

(தொடரும்)



''உங்க ஆளும் கட்சி முடிவு வெகு சமீபமா இருக்கே, அதுக்குள்ள ஏதும் சாதனை செய்யணும்னு தோணுதா?''

''உம்... கொஞ்சநஞ்சம் பாக்கி இருக்கிற நிறுவனங்களுக்கும், கல்லூரிகளுக்கும் என் பெயரையும், என்னோட அம்மா பெயரையும் சூட்டிடலாம்னு இருக்கேன்!''

- லேனாதாசன்



## பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இரங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 120 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஓர் நாள் உணவளிக்க,உணவு வகைகளை அனுசரித்து சுமார், முறையே ரூ. 300/' அல்லது 500/' ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாக நடக்க ரூ. 3000/' அல்லது 5000/' மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்குகொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும் :

**அத்வைத வித்யாசார்யா மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**
**D76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,**
**கும்பகோணம் - 612 001.**

## வேத வைதிக நூல்கள் (விலை தபால் செலவு உட்பட)

I
1. ரிக்வேத ஸம்ஹிதா - நாகராக்ஷரம் - 10 மண்டலங்கள் விலை ரூ. 265/-
2. ரிக்வேத ச்ருங்கலா - நாகராக்ஷரம் - விலை ரூ. 60/-
3. யஜுர்வேத தைத்திரீய ஸம்ஹிதா - நாகராக்ஷரம் - 7 காண்டங்கள் - விலை ரூ. 165/-
4. ஸாமவேத ஸம்ஹிதா - க்ரந்தாக்ஷரம் - 2 பாகங்கள்
   (முதல் பாகம் - ரூ. 185/-, இரண்டாம் பாகம் - ரூ. 210/-)
5. ஸாமவேத அஷ்டப்ராம்மணம் - நாகராக்ஷரம் - 3 பாகங்கள்
   (முதல் பாகம் - ரூ. 210/- இரண்டாம் பாகம் - ரூ. 110/- மூன்றாம் பாகம் - ரூ. 85/-)
6. ஸாமவேத பூர்வாபர ப்ரயோகம் - க்ரந்தாக்ஷரம் - ரூ. 80/-
7. சாந்தி குஸுமாகரம் (2 பாகங்கள்) - விலை ரூ. 170/-
   (1 ம் பாகம் ரூ. 85/- 2 ம் பாகம் ரூ. 85) (க்ரந்தாக்ஷரம்)

II கிரந்தாக்ஷரத்தில் காரிகையுடன் பிரம்மஸ்ரீ முத்துச்ரௌதிகளால் பதிப்பிக்கப்பட்ட கிரந்தங்களின் மறுபதிப்புகள்
1. போதாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 95/-
2. ஆபஸ்தம்ப பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 90/-
3. ஆபஸ்தம்ப ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 55/-
4. ஆச்வலாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 65/-
5. ஆச்வலாயன ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 50/-
6. கல்ப சிந்தாமணி - ரூ. 55/-

III நாகராக்ஷரம்
1. மனாசே ச்லோக - ராமதாஸாசே ச்லோக - ரூ. 25/- (மராத்தி மூலம் தமிழ் பதவுரை)
2. ஸ்ரீ பாலகிருஷ்ண பூஜாவிதானம் - ரூ. 25/- (ஸம்ஸ்கிருதமூலம் - தமிழ் பதவுரை)
3. நவோதந்தம் - நைஷதகாவ்யத்தின் சுருக்கம் - ரூ. 25/- (ஸம்ஸ்கிருத மூலம் - ஆங்கில பதவுரை)
4. வேதபாட வழிமுறை (syllabus) ரிக், யஜுர், ஸாம - ரூ. 25/-
5. ராமோதந்தம் - நாகராக்ஷரம் - விலை ரூ. 25/-

V.P.P. யில் அனுப்ப இயலவில்லை. முழுத் தொகையையும் M.O. (or) Draft மூலம் கீழே குறிப்பிட்டுள்ள முகவரிக்கு அனுப்பவும். செக் மூலம் அனுப்ப வேண்டாம். "எமது நூல்கள் பற்றிய விவரமான கேட்லாக் வாங்க விரும்புவோர் ரூ. 3/- தபால்தலை அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்."

**பிரஸிடெண்ட் - டிரஷரர் - A.V.M.S.G.D.P.S. ஸமிதி, D-76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி, கும்பகோணம் - 612 001.**

நேரில் வாங்க விரும்புவோர் கண்டிப்பாக - ராஜா வேதகாவ்ய பாடசாலை, சாகசாலை தெரு, (சக்கரை படித்துறை அருகில்) கும்பகோணம் - 612 001 என்ற விலாசத்தில் பெற்றுக் கொள்ளவும்.



# கொள்ளையடித்த போலீஸார்!

●● அப்துல் அஸீம் என்பவர் டெல்லியிலிருந்து கையில் ஒரு சூட்கேஸுடன் பெங்களூர் விமான நிலையத்தில் வந்து இறங்கினார். விமான நிலையத்திலிருந்து டாக்ஸி நிறுத்தத்திற்கு வந்து டாக்ஸி பிடித்துப் புறப்படவிருந்தார். நான்கு போலீசார் அவரைச் சுற்றி வளைத்தனர். ''நாங்கள் சி.பி.ஐயைச் சேர்ந்தவர்கள்... உங்களைச் சோதனையிட வேண்டும். எங்களோடு வாருங்கள்'' - என்று அழைக்க, அவர்களுடன் சென்றார் அஸீம். மெஜஸ்டிக் பகுதியிலுள்ள ஓர் ஓட்டலுக்குச் சென்று அஸீமின் பெயரில் அறை ஒன்றை எடுத்து, அவரை அறைக்குள் அழைத்துச் சென்றனர். அங்கு அவருக்குச் சரமாரியாய் அடி உதைகள் விழுந்தன. ஏறக்குறைய மூன்று மணி நேரம் அவரை அடித்துத் துவைத்து விட்டு அவருடைய சூட்கேஸில் இருந்த ஒரு லட்சத்து அறுபதாயிரம் ரூபாயைப் பறித்துக் கொண்டு வேனில் ஏறிப் பறந்து விட்டனர் அந்தப் போலீசார். ராஜப்பா என்ற இன்ஸ்பெக்டர், ஒரு சப்-இன்ஸ்பெக்டர், மற்றும் இரண்டு கான்ஸ்டபிள்கள் என்று நான்கு பேரும் சேர்ந்து செய்த அட்டூழியம் இது. போனவர்கள் அடுத்த நாளிலிருந்து வேலைக்குத் திரும்பாமல் தலைமறைவாகி விட்டனர்.

●● பெங்களூரில் கடந்த சில வருடங்களாகவே குற்றங்கள் மிகவும் அதிகரித்து விட்டன என்பது கசப்பான உண்மை. கொலை, கொள்ளை, கற்பழிப்பு மூன்றுமே கட்டுக்கடங்காமல் போய் விட்டதோடு லாக் அப் சாவுகளும் அதிகரித்து விட்டன. அதனால் கமிஷனராக இருந்த சந்துலால் தூக்கப்பட்டு கோதண்டராமய்யாவைக் கமிஷனராக நியமித்தார் மொய்லி. புதியவர் பொறுப்பேற்ற பிறகும் பிரமாதமான மாறுதல் எதுவும் வந்தபாடில்லை. பல கொலை, கொள்ளை கேஸ்கள் துப்பு துலங்காமலேயே இருந்தன. மொய்லிக்கு சாங்லியானாவின் ஞாபகம் வந்தது. நேபாளத்தைச் சேர்ந்த சாங்லியானா ஏற்கெனவே பெங்களூரில் டி.ஐ.ஜியாகப் பதவி வகித்துப் பல அதிரடி நடவடிக்கைகள் எடுத்ததன் மூலம் புகழ்பெற்றவர். சமூக விரோதிகள் இவர் பதவிக் காலத்தில் வாலைச் சுருட்டிக் கொண்டிருந்தது உண்மை. இவரது வீரதீரச் செயல்கள் மக்களைக் கவர்ந்து விடவே, இவரது பெயரில் ஒரு திரைப்படம் கூட கன்னடத்தில் வெளிவந்து நன்றாக ஓடியது. இந்த முறை சாங்லியானா என்ன செய்யப் போகிறார் என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

●● மொய்லியை இறக்குவதில் பின்புலமாய் இருந்து, கிருஷ்ணா, ராஜசேகர மூர்த்தி ஆகியோர் மூலம் செயல்பட்டுக் கொண்டிருந்த பங்காரப்பா, தற்போதைக்கு மொய்லியை மாற்றுவது நடக்கிற காரியமாய்த் தோன்றவில்லையென்றதும் வேறு வேலை பார்க்கலாம் என்று தீர்மானித்து விட்டார். ''ஏப்ரல் மாதம் புதிய கட்சி துவங்கப் போகிறேன்'' - என்று அறிவித்திருக்கிறார்! கட்சி மாறுவதும் புதிய கட்சி துவங்குவதும் இவருக்குப் பழக்கமான ஒன்றுதான். பிரஜா சோஷலிஸ்ட் பார்ட்டியில் அரசியலை ஆரம்பித்த இவர், அங்கிருந்து காங்கிரஸில் சேர்ந்து, கிராந்தி ரங்கா என்று கட்சி ஆரம்பித்து, தேவராஜ் அர்ஸ் கட்சியில் இணைந்து, ஜனதா கட்சிக்குத் தாவி, மறுபடியும் காங்கிரஸில் சேர்ந்து முதல்வராகி... அப்பப்பா... தலை சுற்றுகிறதா?! ''எம்.ஜி.ஆரும், என்.டி.ஆரும் பிராந்தியக் கட்சி ஆரம்பித்து ஆட்சியைப் பிடிக்கவில்லையா...?'' என்பது இவர் கேள்வி. அவர்களுக்கு மக்களிடம் இருந்த செல்வாக்கையும், கவர்ச்சியையும் பற்றி இவருக்கு யார் எடுத்துச் சொல்வது?

- பெர்னாண்டஸ்

விட்டால், வேர்க்கடலைத் தோலுக்குள் வைத்துத் தைத்து விட முடிகிற தம்மாத்தூண்டு விஷயத்தைக் கூட 70எம்.எம். பண்ணி விடுவார் போலிருக்கிறது. அந்த சாமர்த்தியத்துக்கு முதல் மரியாதை தந்து விடலாம்.

கரம் மசாலா கற்பனைக் குதிரை எங்கெங்கு பாயும்? நாசிக் நோட்டடிப் புக்கூடம் வரைக்கும் பாயும். அங்கிருந்து தெற்கே, ரிஸர்வ் பேங்க்குக்குக் கொண்டு வரப்படுகிற ஆயிரம் கோடி ரூபாயை ஒரு கோஷ்டி அபேஸ் பண்ணுகிற வரைக்கும் பாயும். அதற்கு மேலே சேஸிங் என்று காடு, மலை, சமவெளி, பள்ளத்தாக்கு என்பதாக டைரக்டருக்குப் பிடித்த சகல லொகேஷன்களுக்கும் பாயும்.

எஸ்.பி.பி! குணா போலவே இதிலும் சி.பி.ஐ. ஆபீசர். முகத்தை விடுங்கள். அந்தத் தொப்பை கூடவா நடிக்கும்? கண்ணு படப் போகுதையா!

ஆயிரம் கோடி சமாசாரம் ஒரு பக்கமென்றால், இரண்டு அரை பிளேடுகளின் லீலைகள் இன்னொரு பக்கம். இலவச இணைப்பாக அவர்களோடு ஒட்டிக் கொள்ளும் ஹீரா - (ஆதரவற்றவராம். படத்தில் அநேக ஆதரவற்றவர்கள் வருகிறார்கள். ரெண்டு ரெண்டு வரியில் ஆளுக்கு ஒரு ஃப்ளாஷ்பேக் தந்து விடுகிறார்கள் - ரியல் எஸ்டேட் பாம்ப்லெட் மாதிரி.)

காண்ட்ராஸ்ட்டுக்காக அனு அகர்வால். அந்த ஆயிரம் கோடி லாக்கரின் (என்னவோ கம்ப்யூட்டர், டிஸ்க், ஃபார்முலா என்று ஏராள செட்-அப்புகளை ஒதுக்கி விட்டால் அசல் அலிபாபா.) 'திறப்பான்' (இதைவிடத் தமிழ் கிடைக்குமா?) அவர் கையில் சிக்க, அதற்காக ஒரு கும்பல் அலைய, நெடுநேரம் யார், யாரைத் துரத்துகிறார்கள் என்பதை இனம் பிரித்து உணர்வதில் நூல்கண்டு சிக்கல்.

கதையெல்லாம் கிடக்கட்டும். இரண்டு பேர் இந்தப் படத்தில் உயிரைக் கொடுத்திருக்கிறார்கள். ரகுமான், ஸ்ரீராம். இசை - இந்த நூற்றாண்டின் பிரதிநிதி. கேமரா - அடுத்த நூற்றாண்டின் ட்ரெய்லர்.




இந்த இருவரின் ஆக்ரமிப்பில் - ஸாரி - எங்கே மணிரத்னம்?

- ஆர்.பி.ஆர்.



தீபாவளியை, தீப-ஆவளி (தீபங்களின் வரிசை)யாகக் கொண்டாடும் வழக்கம் வட இந்தியாவில்தான் கடைப்பிடிக்கப்படுகிறது. தெற்கிலோ, விடியற்காலையில், எண்ணெய் தேய்த்துக் குளித்து விட்டு, புத்தாடை அணிந்து, பெரியோர்களிடம் ஆசி பெறுவதும், இனிப்புகள் உண்டு மகிழ்வதும் நம் வழக்கம்.

ஆனால் கார்த்திகைக்கு இங்கே மிக அதிக முக்கியத்துவம் தரப்படுகிறது. வடக்கே தீபாவளியின் போது, வரிசையாய் விளக்கேற்றி வைத்து, ஒளிபரப்புவது போல, கார்த்திகையைத் தீபங்கள் ஏற்றி நாம் கொண்டாடுகிறோம்.

நம் சாஸ்திரங்களின்படி, ஒவ்வொரு நட்சத்திரத்துக்கும் ஒரு தேவதை உண்டு.

அதன் படி கார்த்திகை நட்சத்திரத்துக்
குரிய தேவதை அக்னி. அதனால்தான்
கார்த்திகை நட்சத்திரத்தன்று அக்னிக்கு
முக்கியத்துவம் தரக்கூடிய விதத்தில்,
தீப வழிபாடு செய்கிறோம்.

கார்த்திகை நட்சத்திரம் மேஷ ராசிக்
குரியது. மேஷ ராசியின் அதிபதி செவ்
வாய். செவ்வாய் அக்னி மயமானவர்.
இது கூட கார்த்திகையைத் தீபங்கள்
ஏற்றிக் கொண்டாடுவதன் காரணம்.

விளக்கில் நாம் விடுகிற எண்ணெய
தான் நம் எண்ணங்கள். அந்த எண்ணெ
யில் எரிகிற திரிதான் நம் உடம்பு. எண்
ணெயில் திரி எரியும் போது, ஒளி கிள
கிறது. நம்முடைய நல்ல எண்ணங்களு
கேற்ப இந்த உடல் செயல்படும் போது
மனிதனின் புத்தியானது பிரகாச
மாகிறது.

# விளக்கேற்றுங்கள்; இருளைப் போக்குங்கள்!

**கா**ர்த்திகை தீபம், திருவண்ணாமலை யில் ரொம்ப விசேஷம். இதற்கு என்ன காரணம்? பஞ்சபூதங்களில் அக்னிக்குரிய ஸ்தலம் திருவண்ணாமலை. விஸ்வரூப மெடுத்து நின்ற பரமேஸ்வரனின் அடி முடி காண விஷ்ணுவும் பிரம்மாவும் முயன்றதாய் ஐதீகம்.

கார்த்திகை மாதம் கார்த்திகை நட்சத்திரத் தன்று மாலை, திருவண்ணாமலையில் தீபம் ஏற்றுவார்கள். வீடுகளிலும் அன்றைக்குத் தான் கார்த்திகை தீபம்.

கோவில்களில், கார்த்திகை மாதம், கார்த் திகை நட்சத்திரத்துக்கு முந்தைய தினமான பரணி நட்சத்திரத்தன்றே தீபமேற்றுவது வழக்கம். இதனை பரணி தீபம் என்பார்கள்.

கிருத்திகையை அடுத்து வரும் ரோகிணி நட்சத்திரம் கிருஷ்ணனுக்குரியது என்பதால், வைஷ்ணவர்கள், ரோகிணி நட்சத்திரத்தன்று தீபமேற்றி வணங்குவார்கள். இதனை விஷ்ணு கார்த்திகை என்று சொல்வார்கள்.

ஆண்கள்தான் பெரிய அளவில் யாகங்கள் போன்றவற்றைச் செய்வார்கள். ஆனால் பெண்களுக்கோ வீட்டிலே ஒரு விளக்கை ஏற்றி வைத்து அதனை வணங்கினாலே போதும் சகல சௌபாக்கியங்களும் கிடைத்து விடும். விளக்கேற்றி இருளைப் போக்கி, குடும்பத்தையே ஒளிமய மாக்குகிறாள் பெண் என் பதுதான் இதன் பொருள்.

பாலகிருஷ்ண சாஸ்திரிகள்

கூறத் தொகுத்தவர் :
எஸ். சந்திரமௌலி





* கமலா காமேஷ்

* டெல்லி கணேஷ்

# சோக நடிகர்களிடம் ஜோக் கேட்டால்...!

'சோகமாக நடிப்பவர் களிடம் ஏதாவது சிரிப்பு சம்பவம் கேட்டுப் பார்த்தால் என்ன?' என்று தோன்றியது. முதலில் நினைவு வந்தது... வேறு யார்? கமலா காமேஷ்தான்!

''என் லைஃபே ரொம்ப சோகங்க'' என்று ஆரம்பித்தார் அவர். ''என் கணவர் இறந்தபின் எனக்குத் தெம்பாயிருந்த மக ளும் சில காலம் சென்று கல்யாணமாகிப் போய்விட, தனிமைச் சோகம் என்னை வாட்டு கிறது...''

''அதெப்படி சிரிக்காமலே இருக்க முடி யும்? ஒரு நல்ல ஜோக் படித்தால் கூடச் சிரிப்பு வருமே?''

''பத்து வருஷமாச்சு, கண் பார்வை பாதிக்கப்பட்டு எப்படிப் படிக்கிறது?'' என்று அவர் கேட்ட போது நமக்கே சோக மாகி விட்டது. நம் முகம் போன போக்கு கண்டு பரிதாபப்பட்டு, ''சரி, என் கணவர் சொன்ன கடி ஜோக்ஸ் சிலது சொல்றேன்'' என்றார்.

● ''அமெரிக்காவுக்கு எதிர்ப்பதம் என்ன?''

''அமெரிப் பழம்!''

● ''உயரமான கனி எது?''

''பால்கனி!''

● ''மிகவும் பக்தியான மிருகம் எது?''

''கரடி! அதுதானே பூஜை வேளையில் வரும்!''

இந்த ஜோக்கையெல்லாம் சொல்லி, ''மற்றவங்க சிரிச்சாலும் எனக்குச் சிரிப்பு வரலைங்க'' என்றார் மறுபடி சீரியஸாக!

அதற்குமேல் தாமதித்தால் நமக்கும் சிரிப்பே மறந்துவிடும் என்று தோன்றிய தால் நழுவி னோம்.

டில்லி கணேஷ் - ஆழ்ந்த சோகம் இல்லை என்றாலும் குணச்சித்திரம் என்ற போர்வை யில் இவரை சீரியஸாக்கி விடுகி றார்கள் சினிமாக்காரர்கள். மற்ற படி கணேஷ் கலகல டைப்தான்.

'' 'டௌரி கல்யாணம் வைபோகமே' என்ற நாடகத்தில் எனக்கு 'மாம்பலம் குசேலர்' கதாபாத்திரம். ஆனால் 'ஜலந்தர் கப்புடு' பாத்திரத்தின் மீது எனக்கு ஒரு கண். காத்திருந்தேன். ஒரு நாள் ஜலந்தர் கப்புடு வாக நடித்தவருக்கு உடம்பு சரியில்லாது போக, எனக்கு அடிச் சது சான்ஸ். மொத்த வசனமும் மனப்பாடமாகையால் வெளுத் துக் கட்டிக் கொண்டிருந்தேன். ஆனால் குறிப்பிட்ட காட்சியில் தந்தி வரும். அதைப் படித்ததும் ஏற்பட்ட ஷாக்கில் வசனமெல் லாம் மறந்து போச்சு! நல்லவேளை, அதே காட்சியில் நடித்தவர் சமாளித்துப் பேசி, நாடகத்தை மேலே தொடர்ந்து கொண்டு போனார்.

''அப்படி என்ன எழுதியிருந்தது தந்தி யில் என்கிறீர்களா? ''கப்புடு கேரக்டருக்குத் தானே அலைந்தாய்! பேசவேண்டிய வசனங் களை ஒழுங்காப் பேசடா பார்ப்போம், புண்ணாக்கு!'' என்றுதான்!

''ஒரு படத்தில் எனக்கு வில்லன் வேடம். ஒரு பெண்ணை நான் கெடுக்க முயற்சி செய்யும் போது பாம்பு கொத்த வேண்டும். ஆனால் பாம்போ, படமெடுக் கவேயில்லை. ''உப்புமா கம்பெனின்னா பாம்பு கூடப் படமெடுக்காது போல'' என் றார் ஒருவர். டைரக்டருக்குக் கேட்காத குர லில் சைலண்டாய்ச் சிரித்தேன்.

''பாம்பு தலைதூக்கியது. டைரக்டர் பாம்பாட்டியைப் பார்த்து, ''உசுப்பி விடுய்யா, நல்லா படமெடுக்கட்டும்!'' என்று அதட்டினார்.

பாம்பாட்டி வெறுப்படைந்து, ''எல் லாம் நீங்க கொடுக்கிற பணத்துக்கு இந்தப் படம் போதும்'' என்று ஒரு போடு போட் டாரே, பார்க்கலாம்!''

சந்திப்பு : ஜூலி

# புதிய தென்றல்



ஒரு காதல் ஜோடி. பெண்ணின் அம்மா நடிகை. பையனின் அப்பா பிசினஸ்மேன். கல்யாணத்திற்கு கிரீன் சிக்னல். திடீரென எதிர்ப்பு. இந்த அம்மாவுக்கும், அந்த அப்பாவுக்கும் லடாய். காரணம், சஸ்பென்ஸ். இடைவேளைக்கு ஐந்து நிமிடத்திற்கு முன் விழும் 'நாட்' பிற்பாதி ஐந்தாவது நிமிடத்தில் 'டபுக்'. அப்புறம் என்ன, ரூலிங்கம்!

பல்வேறு படங்களிலிருந்து ஷாட் ஷாட்டாய் உருவல். வசனங்களுக்கு மொத்த குத்தகை அறுபதுகளின் படங்கள். செண்டிமெண்ட் மயம்.

'அப்பாவுக்கும் அம்மாவுக்கும் பின்னால் ஒரு கதை இருக்கணும்' என்று நமக்குத் தெரிந்து ரொம்ப நேரம் கழித்துத்தான் ஹீரோவுக்கு உறைக்கிறது! அதற்கு மேல் ஏராளமாக உண்மை விளம்பிகள் வருகிறார்கள். 'தொபுகடீர்' என்று விழுவதற்காகக் காதலர்கள் மலை உச்சியில் நிற்க, பாதிரியார் ஓடி வந்து உண்மை விளம்புகிறார். ரோட் ரோலர் குரலில் ஒட்டல் மானேஜர் உண்மை விளம்புகிறார். பல்லவி வேறு செண்டிமெண்டலாய் உண்மை விளம்புகிறார். யாராவது 'நாட்'டை இறுக்குவார்களா என்றால், 'பஸ் கிடைக்காது, சீக்கிரம் வீடு போய்ச் சேர்' என்கிறார்கள்!

இரண்டு அனாவசியங்கள். ஒன்று - விவேக், சார்லி, செந்தில், ரெட்டை அர்த்த வசனங்கள். இன்னொன்று தண்ணீர் லாரி குரலில் ஒரு தத்துவப் பாடல்.

உட்கார வைப்பது, இசையும், காமிராவும். தேவேந்திரன், ரவி தேவேந்திரனாகியிருக்கிறார். மனத்தில் நிற்பது 'முத்தங் கொடுக்கணும்' பாடல். இயற்கையைப் பிடிக்க மலை மலையாய் ஏறியிருக்கிறார்கள்.

புது டைரக்டர். 'காதல் சப்ஜெக்ட் எடுத்தால் வெற்றி' என்று யாரோ சொல்லியிருக்கிறார்கள். உருவாமல், உல்டா பண்ணாமல், ஒரிஜனலாய் எடுக்க வேண்டும் என்பதை யாரும் சொல்லவில்லை போலும்!

- துளசி



உதவியாளர் : 'எதிர்வரும் தேர்தலில் எதிர்க்கட்சி வெற்றி பெற்றால் தலைவர் பதவியைத் துறந்து விடுகிறேன்'னு ஏன் தலைவரே சொன்னீங்க?

தலைவர் : அதுக்கு என்ன இப்ப?

உதவியாளர் : நம்ம கட்சிக்காரங்களே நிறைய பேர் எதிர்க்கட்சி ஜெயிக்கப் பாடுபடறாங்களே!"

- சீகாழி வி. ரேவதி

லக்ஷ்மணன் புறப்பட்டான். அண்ணனுடைய துயரத்தையும் நெருப்பைப் போன்ற கோபத்தையும் அப்படியே ஏற்று வாங்கிக் கொண்டு புறப்படப் போனான்.

உடனே ராமன் யோசிக்கலானான். லக்ஷ்மணனுடைய சுபாவமறிந்தவனானபடியால் இது அபாயத்தில் முடியும் என்று எண்ணித் தம்பியைக் கூப்பிட்டு மறுபடியும் ராமன் பேசலானான்.

''சுக்ரீவனிடம் என் கோபத்தைச் சொல்லும் போது கடுஞ்சொற்கள் உபயோகிக்க வேண்டாம். என்னவாயினும் அவனை நாம் சிநேகிதனாகக் கொண்டு விட்டோம். அவனுடைய தவறை மட்டும் எடுத்துக் காட்டு'' என்று எச்சரித்து அனுப்பினான்.

லக்ஷ்மணன் ''அப்படியே!'' என்று சொல்லிச் சென்றான்.

ஆயினும்



# சக்கரவர்த்தித் திருமகன்

மகா கோபத் தோடேதான் கிஷ்கிந்தை வாயிலை அணுகினான்.

லக்ஷ்மணனுடைய கோபத் தோற்றத்தையும் கையிலிருந்த ஆயுதங்களையும் பார்த்து வானரக் காவலாளிகள் ஏதோ விபரீதம் நடக்கும் போலிருக்கிறது, கோட்டையை ஜாக்கிரதையாகக் காக்க வேண்டும் என்று அவர்களும் ஆயத்தமானார்கள்.

அவர்களுடைய இந்த நடவடிக்கையைப் பார்த்த லக்ஷ்மணனுக்கு இன்னும் கோபம் அதிகரித்தது.

சில வானரர்கள் ஒரே ஓட்டமாக ஓடி அந்தப்புரத்திலிருந்த சுக்ரீவனுக்கு விஷயத்தைச் சொன்னார்கள். ''லக்ஷ்மணன் பெருங் கோபமாய் வில்லும் பாணமுமாக வந்து கொண்டிருக்கிறான். தடுத்தாலும் நிற்கவில்லை'' என்றார்கள்.

வானர ராஜனோ கள்ளும் ஸ்திரீகளுமாக அந்தப்புரத்தில் மயக்கத்தில் கிடந்தான். வானரர்கள் சொன்னது அவன் காதில் ஏறவில்லை.

ராஜ சேவகர்களுடைய உத்தரவின் பேரில் குகை வாயிலைச் சேனையாட்கள் பலமாக நின்று யாரும் உள்ளே பிரவேசிக்காமல் காவல் காத்தார்கள். இப்படி நிகழ்ச்சிகள் மேன்மேலும் இளையபெருமாளுக்குக் கோபமூட்டும் முறையில் வளர்ந்து கொண்டு போயின.

தடையை மீறி லக்ஷ்மணன் உள்ளே பிரவேசித்தான். முதலில் அங்கதனைக் கண்டான். வாலியின் குமாரன் அங்கதனைக் கண்டதும் லக்ஷ்மணனுடைய கோபம் ஓரளவு தணிந்தது.

''குழந்தாய்! போய் வானர ராஜனிடம் தெரியப்படுத்துவாய்! ராம சந்திரனுடைய துயரத்தால் தம்பி லக்ஷ்மணன் மிக வருத்தத்துடன் அரண்மனை வாயிலில் அரசனைப் பார்க்கக் காத்திருக்கிறான் என்று சொல்வாய்!'' என்றான்.

அங்கதன் அந்தப்புரம் போய் சுக்ரீவனிடம் விஷயத்தை மிக வினயமாய்த் தெரிவித்தான்.

ஆனால் கிராம்மிய போகத்தில் மூழ்கியிருந்த சுக்ரீவனுக்கு இன்னும் மயக்கம் தெளியவில்லை. இதைக் கண்டு அங்கதன் மிகவும் வருத்தப்பட்டான். அந்தரங்க மந்திரிகளுடன் என்ன செய்வது என்று ஆலோசித்தான்.

ஹனுமான் உள்பட சில மந்திரிகள் உள்ளே சென்று சுக்ரீவனுக்கு விஷயங்களை நன்றாக எடுத்துக் காட்டி, அவன் புத்தி தெளிவடையச் செய்தார்கள்.

''நான் ஒரு பிசகும் செய்யவில்லையே? என் நண்பர்களாகிய ராம லக்ஷ்மணர்களுக்கு என் மேல் ஏன் கோபம்? யாரோ விரோதிகள் கோள் சொல்லி அவர்களுடைய மனத்தைக் கெடுத்திருக்க வேண்டும்'' என்றான் சுக்ரீவன்.

ஹனுமான், ''அரசனே, நான் சொல்லக் கடமைப்பட்டவன், சொல்லுகிறேன். கோபித்துக் கொள்ளக் கூடாது. ராமனுக்கு நாம் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றாமல் தாமதம் செய்து விட்டோம். ராமசந்திரனுடைய துயரத்தை நாம் மறந்து விட்டோம். இது நமக்கு அபாயமாக முடியும், ஆனபடியால் செய்ய வேண்டியதைச் செய்வீர். லக்ஷ்மணனிடம் மன்னிப்புக் கேட்டு இனி தாமதப்படுத்தாமல் ராமனுக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுவீர்'' என்றான்.

இதன் மேல் சுக்ரீவன் லக்ஷ்மணனை அழைத்து வரச் சொன்னான்.

லக்ஷ்மணன் சென்றான். கிஷ்கிந்தையின் அழகையும் உன்னத நாகரிக நிலையையும் பார்த்து வியந்தான். அழகிய தெருக்களின் வழி சென்று சுக்ரீவனுடைய அந்தப்புரத்துக்கு வெளியே நின்றான். உள்ளிருந்து மகிழ்ச்சி ஓசைகளும் ஆட்டமும் பாட்டும் கேட்டு இவர்கள் தங்கள் கடமையை முற்றிலும் மறந்து விட்டு, இப்படி போகத்தில் மூழ்கியிருக்கிறார்களே என்று கோபம் இன்னும் அதிகமாயிற்று. ஆயினும் ஸ்திரீகள் நிறைந்து கிடக்கும் அந்த இடத்துக்குள் போகக் கூச்சப்பட்டுத் தூர ஒரு மூலையில் நின்று வில்லின் நாணை இழுத்து ஒலியெழுப்பினான்.

அந்த ஒலி கிஷ்கிந்தா நகரத்தை நடுங்கச் செய்தது. நாண் ஓசையைக் கேட்டதும் சுக்ரீவன் பயந்து எழுந்து இளையராஜகுமாரன் உண்மையில் ஏதோ கோபமாக வந்திருக்கிறான் என்று அபாயத்தை உணர்ந்து கொண்டு தாரையை முன்னதாகச் சென்று லக்ஷ்மணனைச் சமாதானப்படுத்தும்படி கேட்டுக் கொண்டான்.

தாரை லக்ஷ்மணனிடம் சென்றாள். அழகிலும் உலக விஷயங்களைப் பற்றிய சாமர்த்தியத்திலும் பேச்சு நயத்திலும் அவளுக்குச் சமானம் யாருமில்லை. அவள் லக்ஷ்மணனுக்குச் சொன்னாள் :

''வெகு நாட்கள் தரித்திரத்தையும் பகைவன் தொந்தரவையும் பொறுத்துக் கஷ்டப்பட்ட சுக்ரீவன் நீங்கள் சம்பாதித்துக் கொடுத்த ராஜ்யசுகங்களை அனுபவித்து வருகிறான். போகத்தில் புத்தி மயங்கி விட்டான். அவன் குற்றம் எனக்குத் தெரியாததல்ல. நீங்கள் அவன் மேல் கோபம் கொள்ளலாகாது. எல்லாம் தெரிந்த நீங்கள் பொறுமையிழக்கலாகாது. மது பானத்திலும் பிராக்ருத போக மயக்கத்திலும் மூழ்கிய சுக்ரீவனைப் பூரண அறிவைப் பெற்ற நீங்கள் மன்னிக்க வேண்டும். அவன் உங்களுக்குச் செய்ய வேண்டியதை மறந்துவிடவில்லை. பல இடங்களிலுள்ள நம்முடைய வீரர்களையெல்லாம் வந்து சேர உத்தரவு பிறப்பித்திருக்கிறான். அவர்கள் இன்றோ நாளையோ வந்து விடுவார்கள். பிறகு சீதையைத் தேடும் வேலையும் ராவணனை எதிர்த்து வெற்றி பெறும் வேலையும் நடைபெறும், சந்தேகப்பட வேண்டாம். அரசனைப் பார்க்க உள்ளே வரலாம்'' என்று அழைத்துச் சென்றாள்.

லக்ஷ்மணன் கோபம் தணிந்து உள்ளே சென்றான்.

கோபம் தணிந்த நிலையில் வந்த லக்ஷ்மணனைப் பார்த்து சுக்ரீவன் மிகச் சந்தோஷப்பட்டு ஆசனத்திலிருந்து இறங்கி வணங்கினான்.

''நான் எந்தக் குற்றம் செய்திருந்தாலும் மன்னிக்க வேண்டும். ராகவனுடைய சிநேகத்தாலும் வீரத்தாலும் அல்லவா நான் ராஜ்ய பதவியை அடைந்தேன். ராமன் செய்த உபகாரத்தை நான் மறப்பேனா? ராம

ராஜாஜி

னுடைய பராக்கிரமத்தை நான் அறிந்தவன் அல்லவா? என் துணையே இல்லாமல் பகைவர்களை நாசம் செய்யும் பலம் அவருக்கு உண்டு என்பது எனக்குத் தெரியும். நான் என் சேனைகளுடன் வெறுமனே அவரைப் பின்பற்றிச் செல்வேன். அவ்வளவே. நிச்சயமாக ராவணன் அழிவான். சீதையைத் தேடுவதற்கு உடனே ஏற்பாடுகள் செய்யப்படும், நான் செய்த தாமதத்தை மன்னிப்பீர்களாக'' என்று சுக்ரீவன் சொன்னான்.

இதைக் கேட்ட லக்ஷ்மணன் மகிழ்ச்சி அடைந்தான்.



எனது நண்பர் டி. சண்முகசுந்தரம் திருமணம் திருச்சியில் நடந்தது. மணமக்களை வாழ்த்த வந்த மக்கள் சக்தி இயக்கத்தினர் அனைவருக்கும் நன்றி தெரிவிக்கும் வகையில் ஒரு சிறு உறையின் உள்ளே கீரை, வெண்டை, பப்பாளி விதைகளைப் போட்டுக் கொடுத்தார்கள். தென்னை, தேக்கு, புளி, வேம்பு போன்ற 200 க்கு மேற்பட்ட மரக்கன்றுகளும் கொடுத்தார்கள். உறையின் மீது ''வீட்டுக்கு ஒரு தோட்டம்'' என்ற வாசகம் அச்சிடப்பட்டிருந்தது.

- சி. நீலமேகம்.

''உன்னைப் போன்ற தீரன் ராமனைத் தவிர வேறு யாருமில்லை. ரிச்யமூகம் வந்து ராமனைக் கண்டு அவன் துயரத்தைத் தணிக்கும் வார்த்தைகளைச் சொல்வாயாக'' என்றான்.

ஒரே சிவிகையில் சுக்ரீவனும் லக்ஷ்மணனும் ஏறிச் சென்றார்கள். ஏற்கெனவே செய்யப்பட்ட ஏற்பாடுகளையெல்லாம் ராமனுக்குச் சொல்லி அவனைத் திருப்திப் படுத்தினார்கள்.

ராமன் சந்தோஷமாகப் பேசினான் :

''உன்னைப் போன்ற நண்பன் உலகத்தில் வேறொருவனில்லை. மேகங்கள் மழை பெய்வதைப் போலும், சூரியன் இருட்டை நீக்குவதைப் போலும், சந்திரன் மக்கள் உள்ளத்தைக் குளிரச் செய்வதைப் போலும் யாருடைய ஏவுதலுமில்லாமல் உதவுவது உண்மை நண்பனுடைய சுபாவம். உன் நட்பை நான் சம்பாதித்தது என் பாக்கியம். இனி ராவணன் அவன் குலத்துடன் நிர்மூலமாவது நிச்சயம்.''

இவ்வாறு ராமன் தன் நன்றியையும் மகிழ்ச்சியையும் சுக்ரீவனிடம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, பெருங் கூட்டமாக வானர வீரர்கள் தத்தம் சேனைகளுடன் சுக்ரீவன் அனுப்பியிருந்த உத்தரவின்படி பல்வேறு காடுகள், மலைகள், சமுத்திரக் கரைகளிலிருந்து வந்து சேர்ந்து விட்டார்கள். அவர்கள் கிளப்பிய தூசியால் ஆகாயம் மறைந்து இருள்மூடி விட்டது.

பல்வேறு வடிவமும் நிறமும் கொண்ட வானரர்களும் கரடிகளும் கோடிக்கணக்காகக் குழுமி விட்டார்கள். இந்த மாபெரும் சேனைக்குச் சொல்ல வேண்டியதைத் தகுந்தபடி சொல்லி, அவரவரும் தாற்காலிகமாக இருக்குமிடங்களைச் சுக்ரீவன் நியமித்தான்.

பிறகு யோசித்து சேனாதிபதிகளை எட்டு திக்குகளுக்கும் அவரவருக்குச் சேர்ந்த வானரக் கூட்டங்களோடு சென்று சீதையைத் தேட உத்தரவிட்டான்.

இவ்விடத்தில் ஒரு விஷயத்தை எடுத்துக் காட்டலாம். கம்ப ராமாயணத்தில் தாரையின் குணத்துக்குக் களங்கமோ குறையோ ஏதுமில்லாமல், வாலி இறந்த பின் அவளை விரதம் காத்த கற்பரசியாகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. வால்மீகி ராமாயணத்தில் அப்படியில்லை. வாலி இறந்தபின் சுக்ரீவன் வசத்தில் ராஜ்யாதிகாரத்துடன் தாரை உள்பட அந்தப்புரம் முழுவதும் சேர்ந்துவிட்டதாக வைத்துக் கொண்டு விஷயங்கள் சொல்லப்படுகிறது. சுக்ரீவன் கிராம்மிய சுகபரவசனாகிப் போய் மதுபானத்திலும் மூழ்கி ராம காரியத்தை மறந்து கிடந்தபோது, தாராதேவியையும் அதில் சேர்த்தே குறிக்கப்பட்டிருக்கிறது.

பழைய ராஜ குல சம்பிரதாயத்திலும் வேறு குலங்களிலும் அண்ணன் இறந்தபின் புருஷனையிழந்த அண்ணன் மனைவியைக் குலத்துக்கு எஜமானனான தம்பி, தன் மனைவியாகச் சேர்த்துக் கொள்ளும் வழக்கம் இருந்து வந்தது. அது அந்தக் காலத்து ஆசாரம். ஒரு காலத்து வழக்கத்தின் நன்மை தீமைகளை இன்னொரு யுகத்

தில் ஆராய்ந்து உணர்வது கடினம். அதற்கு விசால நோக்கமும் கற்பனா சக்தியும் வேண்டும். இந்தக் காலத்துச் சூழ்நிலைகளை உத்தேசித்து ஆராய்ந் தாலும் ஒன்று வெளிப்படை. புருஷ னில்லாத ஸ்திரீ ஒரு எஜமானனிடம் நெருங்கிப் பழகும் அவசியம் ஏற்பட் டால் அந்த ஸ்திரீயைப் பற்றி மக்களின் வாயை அடக்குவது கஷ்டம். விவாகம் செய்து கொண்டு விட்டால் இந்த அபாயமில்லை.

தவிர, வால்மீகி முனிவருடைய சித் திரத்தை வைத்துக் கொண்டாலும் நாம் தாரை பேரில் குற்றம் சாட்ட முடியுமா? அவள் மகா சாமர்த்தியசாலி; ராஜ நீதியும் உலகப் போக்கும் நன்றாய் அறிந்தவள் : வரப்போகும் சுக துக்கங் களை முந்தியே தெரிந்து கொள்ளும் சக்தியைப் பெற்றவள். வாலி இறந்த பின் அங்கதனைப் பற்றியே அவ ளுடைய பெருங்கவலை. இந்தக் கார ணத்தாலேதான் அவள் சுக்ரீவனுக்கு அடங்கிப் போனாள் என்று வைத்துக் கொள்ள வேண்டும்.

நம்முடைய இக்காலத்து நடவடிக் கைகளைத்தான் பார்ப்போமே. மனை வியை யிழந்து அழுது புரண்டு அந்த ரங்க சுத்தியுடன் துக்கப்பட்ட ஆண் மக்கள் எத்தனை பேர் மறுபடி விவாகம் செய்து கொள்வதைப் பார்க்கிறோமே! முன் காதலித்த மனைவியின் நினைவை நன்றாகக் குறைவின்றிக் கௌரவித்தே இப்படிச் செய்கிறதையும் பார்க்கி றோம். யோக்கியமாக இருப்பதையும் பார்க்கிறோம். அதில் யாதொரு தவறும் காண்பதில்லை. ஆண் மக்களின் நட வடிக்கைக்கு ஒரு தருமம் ஸ்திரீகளுக்கு வேறு தருமமா? தாரையை ஏன் குற்றம் சொல்ல வேண்டும்? கற்பு என்பது இரு பாலாருக்கும் ஒன்றே.

வாலி இறந்த பின் தாரை அந்தப் புரத்துக்கு எஜமானித் தாயாக விளங்கி சுக்ரீவனையும் அங்கதனையும் தன் னுடைய நுட்பமான புத்தியும் அறிவும் கொண்டு நன்றாகக் காப்பாற்றி வந் தாள். இது வால்மீகி ராமாயணத்தில் காணும் • தாரை. கம்பருடைய தாரையோ விரதம் காத்து வந்த களங்க மற்ற விதவையாகவும் ராஜ மாதாவா கவும் விளங்குகிறாள். இது நம்முடைய மனத்துக்கு மிகப் பிடித்தமான புனிதச் சித்திரமாக இருக்கிறது. ஆனால் மற்



"கபடி வீரர் சினிமா எடுத்தால் என்ன பெயர் வைப்பார்?"

"மூன்றெழுத்தில் என் மூச் சிரைக்கும்!"

- ந. பிலிப் செல்வமுத்து.

றொன்றும் உலகானுபவத்துக்குப் பொருந்தியதாகத்தான் இருக்கிறது.

வால்மீகி ராமாயணத்திலும் பின் னால் ஓர் இடத்தில் கம்பனுடைய சித் திரத்துக்கு ரொம்ப இடம் தரும் வழி யில் சொல்லப் பட்டிருக்கிறது. (சுந்தர காண்டம் 13:28) ஹனுமான் லங்கையில் தேடித் தேடி சீதையைக் காணவில்லை என்று துக்கத்தில் மூழ்கி இனி என்ன செய்யலாம், கிஷ்கிந்தைக்குத் திரும்பிப் போய் முயற்சி எல்லாம் வீணாயிற்று என்று தெரியப்படுத்தினால் என்ன வெல்லாம் நேரிடுமோ என்று ஹனு மான் ஆராய்கிறான். அங்கே சொல்லப் படுகிறது வால்மீகி ராமாயணத்தி லேயே : ''சீதையைக் காணாமல் திரும்பினேனானால் சுக்ரீவன் இறப் பான். புருஷன் இறந்த பின் ருமை உயிர் வைத்திருக்க மாட்டாள். வாலி கொல் லப்பட்ட காலத்திலிருந்து துக்கத்தில் மூழ்கித் துரும்பாக இளைத்துப் போய் உயிரைத் துறக்கவே விரும்பி வரும் வானர அரசி தாரையும் உயிரை நீப்பாள்.'' இவ்வாறு வால்மீகி ராமா யணத்தில் சொல்லப்பட்டிருப்பது கம்ப னுடைய சித்திரத்துக்குச் சரியாக இருக் கிறது. இதை வைத்தே கம்பன் தன் ஒப் பற்ற கற்பனா சக்தியைச் செலுத்தி முழுச் சித்திரத்தையும் அதற்குத் தகுந்த வாறு உண்டாக்கிக் கொண்டு சில விஷ யங்களை மாற்றிச் சரிப்படுத்திப் பாடிய தாக எண்ணுகிறேன்.

(தொடரும்)



மொத்தம் மூன்று 'போட்டோ'க்கள் இருந்தன. இரண்டு கறுப்பு வெள்ளையிலும், ஒன்று கலரிலும். முதல் 'போட்டோ'வில் அந்தப் பெண் உயரமாய் லேசாய் மிரட்சியுடன் நின்றிருந்தது. கை வைக்க ஒரு மேடை போட்டு அதில் இடது கையை மடித்து வைத்திருந்தது. பின்பக்கம் உயரமாய் ஆளுயர நிலைக் கண்ணாடி. தலையின் நெற்றிச் சுட்டியுடன் இணைத்து பின்பக்கமாய் நெடுக தாழம்பூ வைத்து, ஜடை பின்னி, அது பின்புற முழங்கால் வரை தொங்கிக் கொண்டிருந்தது. கண் மை 'பளிச்'சென இருந்தது.

''இது பெரிசானப்ப எடுத்ததாம்....'' என்றாள் அக்கா.

இரண்டாவது போட்டோ க்ளோஸப். தோளோடு தலை மட்டும் பிளாஷ் போட்டு எடுத்திருக்கிறார்கள். பவுடரோடு லிப்ஸ்டிக்கெல்லாம் போட்டு அசிங்கமாய் இருந்தது. செயற்கையாய்ச் சிரிப்பு... ஃபோட்டோகிராஃபரின் 'ஸ்மைல் ப்ளீஸ்...' உடனே அடுத்த போட்டோவுக்கு போனான். கலர்.

''அவங்க வீட்டு மாடியில எடுத்தது...''

தொட்டி ரோஜாச் செடி அருகே அதிகாலையில். மஞ்சள் பட்டுப் புடைவையில் வாடாமல்லி கலர் முன்றானை. ஜரிகையெல்லாம் வைத்து, கல்யாணப் பெண் போல. முகம் மட்டும் அலங்காரமில்லாமல் 'சிம்பிளாக' இருந்தது.

''புடிச்சிருக்கா...'' என்றாள் அக்கா. தோள் வழியாக. ஒரு நொடியில் வாழ்க்கையை நிச்சயிக்கும் நேரம். 'இந்தப் பெண்ணா... இந்தப் பெண்ணா என்னோடு கடைசி வரை....' முகத்தை உற்றுப் பார்த்தான்.

''பேரென்னவாம்...'' என்றான், முனகலாய்.

''அப்ப புடிச்சிருக்கு...''

''பேர்தான் கேட்டேன்...'' என்று முறைத்தான்.

''கசித்ரா...'' என்றாள். ''பேர் நல்லாத்தான் இருக்கு...'' என்று சொல்லி விட்டுப் போனவள் திரும்பி, ''நல்லா பாரு. முடிவு பண்ணிக்கோ...'' என்று போய் விட்டாள். ஃபோட்டோவை மீண்டும் பார்த்த போது பிடித்த மாதிரியும் இருந்தது. பிடிக்காத மாதிரியும் இருந்தது. பின் யோசிக்கும் போது ஒன்றும் தோன்றவில்லை. மனசு ரொம்ப நிச்சலனமாய் இருந்தது. எதுவுமே தோன்றாமல் கொஞ்ச நேரம் வெறுமனே பார்த்துக் கொண்டிருந்து விட்டு சாப்பிடப் போனான்.

''என்ன பார்த்தாச்சா?'' என்றாள் அக்கா, கிண்டலாக.

''ம்...'' என்று பெருமூச்சு விட்டான்.

''என்ன முடிவு பண்ணியிருக்க...''

''நீ என்ன சொல்றே...?''

''நானா கல்யாணம் பண்ணிக்கப் போறேன்...?''

''அப்ப வேணாம்.''

''என்ன விளையாடறியா...?'' என்றாள் முகம் மாறி.

''அக்கா! இங்க பாரு... கல்யாணம்னு சொன்னவுடனே நான் ஏதோ மோகத்துலயோ, வெக்கத்துலயோ பேசறதா நினைச்சிக்காதே. நிஜமா எனக்குப் பயமா

திருவையாறு பாலுசாமி



# தடுமாற்றம்

விருக்கு..''

''பயமா...? அடப்பாவி...!''

''பின்ன ஒரு போட்டோவைக் கொடுத்து உன் வாழ்க்கையைத் தீர்மானிச்சுக்கன்வா...''

''வேறென்ன வேணும்...?''

''நிறைய யோசிக்கணும். நிறைய பேசணும்...''

''யார்கிட்ட?''

''உன்கிட்ட... அந்தப் பொண்ணு கிட்ட...''

''பேச... பேசுவோம்...''

விவேகானந்தனுக்கு நிறைய பேசப் பிடிக்கும். அக்காவிடம் நிறைய பேசியிருக்கிறான். வேறு ஆளில்லாத குறையோ என்னவோ, பேசித் தீர்த்திருக்கிறான். அப்பா அம்மாவெல்லாம் அழுக்கு கலர் சட்டமிட்ட மங்கலான கண்ணாடியில் இரண்டு கறுப்பு வெள்ளை உருவங்கள். அவ்வளவு தான். வேறெதுவும் தெரியாது. மற்றபடி எல்லாம் அக்காதான். இதுநாள்வரை. இனி தான் தீர்மானிக்க வேண்டும்.

தூங்கப் போகும் போது அக்கா கூப்பிட்டாள்.

''பேசணும்விவே...''

''சொல்லு...''

''இங்க பாரு... பொண்ணு பி.எஸ்ஸி., படிச்சிருக்கா. நல்ல சிவப்பு. உன்னை விட ரெண்டங்குலம் உயரம் குறைச்சல். ஒயர் கூடை பின்னுவா. தையல் தெரியும். 'கல கல'ன்னு பழகற சுபாவம். கடை கண்ணிக்குப் போக நல்ல பழக்க வழக்கம். உனக்குச் சரியானவ...''

''அது மட்டும் போதுமா... எனக்கு ஒத்துப் போகணுமே...''

''எப்படி... புரியல?''

''என்னோட 'டேஸ்டுக்கு' ஒத்து வருவாளா?''

''நல்லாவே சமைப்பாளாமே...''

'' 'டேஸ்டு'ன்னா காரக் குழம்பு, கட்ட அப்பளம்னு சொல்லலை... மனசு ரீதியா... எனக்கு நிறைய பேசணும். ஒளிவுமறைவில்லாம... ராத்திரி ஒரு மணி வரைக்கும் படிக்கணும். ஆடம்பரம் பந்தா இல்லாம எப்போதும் 'சிம்பிளா' இருக்கணும். மழை பார்க்கப் பிடிக்கும். மழைத் தண்ணியில வெறுங்காலால நடக்கப் பிடிக்கும். ரொம்ப மெதுவா 'மேண்டலின் மியூசிக்' பிடிக்கும். இன்னும்...''

''இதே மாதிரிதானா இன்னும்...''

''அப்படி இல்ல...''

''அப்ப வர்றவ உனக்குத் தகுந்த மாதிரி சுத்தமா மாறிக்கணும். அவ்வளவுதான்...''

''அப்படியும் சொல்ல முடியாது. அவ விருப்பப்படியும் இருக்கலாம்...''

''நீ மாறுவியா...?''

''யாரும் மாற வேண்டாம்... முகம் சுளிக்காம... கொஞ்சம் ஒத்துழைப்பு...''

''சின்ன விஷயத்துக்கெல்லாம் ரொம்ப தடுமாற்ற. வாழ்க்கைங்கிறதே 'அட்ஜஸ்ட் மெண்ட்'தான். ஒருத்தருக்கொருத்தர் விட்டுக் கொடுத்தல்தான்... உன் உடம்புக் குத்தான் வயசு இருபத்தெட்டாச்சே தவிர, மனசுக்கு இல்ல... இன்னும் கான்வென்ட் பையனாத்தான் இருக்கே...''

''இதில கூட என் விருப்பப்படி இல் லேன்னா எப்படி...?''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. நீ என்னென்ன பேசணுமோ எல்லாம் அந்தப் பொண்ணுகிட்டயே நாளைக்குப் பேசு. நாளைக்கு நாம போறோம் பொண்ணு பாக்க. இப்பப் போய்ப் படு. ரொம்ப யோசிக்காதே... பைத்தியமாயிடுவே..'' என்றாள் எரிச்சலாய்.

மறுநாள் விவேகானந்தன் ஆபீஸுக்கு அரை நாள் லீவு போட்டு விட்டு அக்கா வோடு பெண் பார்க்கப் போனான்.

''எப்படியாவது பொண்ணு கூட பேச றதுக்கு அனுமதி வாங்கித் தரேன். நல்லாப் பேசு. நிறைய பேசு... என்ன?''

''பார்க்கலாம்'' என்றான் மெதுவாய். ''அக்கா! உனக்கே தெரியும். எனக்குத் தாழ்வுமனப்பான்மை அதிகம். பொண்ணு என்னை விட எல்லாத்திலயும் அழகு, படிப்பு, 'பர்சனாலிடி'. நீ சொன்ன மாதிரி ரெண்டங்குலம் குறைச்சலா இருந்தா நல்லது. அது மாதிரி பாத்துக்கோ...''

''இதென்ன புதுக்கதை?''

''ஆமாம்... பின்னால நான் பெரிய ஆளா... நீ பெரிய ஆளா'ன்னு பிரச்னை வரக் கூடாது...''

''அப்ப எங்கியாவது கிராமத்தில கண் டாங்கிப் புடைவை புடிக்க வேண்டியது தான்...''

''அப்படியும் இல்ல.. கொஞ்சம் மாடர்னா இருந்தா தப்பில்லே... நாலு இடம்... ஆஃபீஸ் ஃபங்ஷன் அது இதுன்னு... பாத்துச் சிரிக்கிற மாதிரி இருக்கக் கூடாது..''

''ரொம்ப குழம்பிட்டேடா...''

பெண் வீட்டுக்குப் போன போது வெற்றிலை, பாக்கு போட்டுக் கொண்டு, இரண்டு பெரிசுகள் ரொம்ப சம்பிரதாய மாய்க் கும்பிட்டது. ஒருவர் பெண்ணின் அப்பாவாம். வந்த இடத்துக்குச் சம்பந்த மில்லாமல் எதை எதையோ பேசி விட்டு கடைசியில் ''ஆங்... பெண்ணைக் கூப் பிடுங்கப்பா...''

அந்தப் பெண் வந்தது. 'ஃபோட்டோ' வில் பார்த்ததை விட கன்னம் கொஞ்சம் செழிப்பாய் இருந்தது.

பொத்தாம் பொதுவாய் எல்லாரையும் கும்பிட்டு விட்டு இவனைப் பார்த்து 'ஹலோ' என்றது. எதிர்பாராதவனாய் 'ஹலோ' என்றான் திரும்ப. அக்காவைப் பார்க்க, அவள் காதோரம் 'பி.எஸ்ஸி' என் றாள்.

காப்பி, டிபனெல்லாம் சாப்பிட்ட பிறகு அக்கா பெண்ணின் அம்மாவின் காதில் மெதுவாய் கிசுகிசுக்க, அவர் சப்த மாய், ''பேஷா... தாராளமா... இதென்ன புதுசா இப்பவெல்லாம்...'' என்ற போது, விவேகானந்தன் கையில் சிவப்பாய் இரண்டு சொட்டு தெறித்தது. வெற்றிலை எச்சில்.

அந்த 'ரூம்' ஏதோ 'கோடௌன்' போல இருந்தது. சுசித்ரா நாற்காலியை இழுத்துப் போட்டு, ''உட்காருங்க...'' என் றாள்.

காலோரம் ஏதோ 'புசுபுசு'வென உரசி யது. கால் நகர்த்த 'மியாவ்' என்றது.

''வளக்கறோம்...'' என்று சொல்லி அந்தப் பூனையை அதட்ட, அது மெதுவாய் கண் சிமிட்டிக் கொண்டு நகர்ந்தது.

''சார்... பேரென்ன சொன்னீங்க... விவேக்கா?''

''விவேக்... விவேகானந்தன்...''

''நீங்க பேசறதுக்கு முன்னாடி நான் சில விஷயங்களைத் தெளிவுபடுத்திடறது நல்லது. என்னைப் பொறுத்தவரைக்கும்



"இந்தப் பேப்பரில் நிறைய அச்சுப் பிழை இருக்கும் போலிருக்கு!"

"எப்படிச் சொல்றீங்க?"

"நம்ம பையனோட பரீட்சை எண் கூட இதுல வந்திருக்கே!"

- ஞா. ஞானமுத்து.

நோ ஃபார்மாலிட்டீஸ்.. மனச விட்டு சிலது சொல்லிடறேன். 'வித் யுவர் பர் மிஷன்?''

''ம்...'' என்றான் சன்னமாய்.

''ஒரு பொண்ணுங்கிறதால என் அப்பா, அம்மா, குடும்பம், கௌரவம் இதுக்கெல்லாம் கட்டுப்பட்டு நான் சிலதை இழந்திருக்கேன். என்னோட ஆசைகள், எண்ணங்கள் இதுக்கெல்லாம் ஒரு தடை எனக்காகப் போட்டு வச்சிருந்தேன். ஆனா கல்யாணத்துக்கு அப்புறம் நான் முழுசாவே நானா இருக்கணும்னு நினைக்கிறேன்...''

''புரியலை...''

''நீச்சல், கராத்தே இதிலெல்லாம் எனக்குப் பயங்கர தாகம் உண்டு. ஒரு 'ஆவரேஜ்' குடும்பப் பெண்ணா ரெண்டு குழந்தை பெத்துட்டு ஸ்கூட்டர் பின்னாடி உட்கார்ந்து சினிமா போறது மட்டும்தான் வாழ்க்கையா இருக்கறதை நான் விரும்பலை... கொஞ்சம் வித்தியாசப்படணும்னு நினைக்கிறேன்...''

விவேகானந்தன் மௌனம் காத்தான்.

அவள் இன்னும் அருகே குனிந்து,

''சார்... கத்துக்க நிறைய இருக்கு இந்த உலகத்தில. தையலும், ஒயர் கூடையும்தான் எங்க வீட்ல முடிஞ்சது. குடும்பம், குழந்தை தவிர எனக்காகச் சுதந்திரமா நேரத்தைச் செலவழிக்க முடியுமா? கடிகாரம் மாதிரி சுத்திச் சுத்தி ஒரே ஆளை மையமா வச்சு சுத்திக்கிட்டிருந்தா என்ன சுவாரஸ்யம் இருக்கு? சொல்லுங்க...''

''ஆக நீச்சலும், கராத்தேயும் மட்டும் தான் உங்க லட்சியமா?''

''அப்படி இல்ல. இன்னும் இருக்கு. கராத்தே, கம்ப்யூட்டர்னு பெரிய லிஸ்ட். இப்பப் பேச நேரமில்லை. இப்பவே பாருங்க யாரோ ஜன்னல் வழியா எட்டிப் பார்க்கிறாங்க...''

''உங்க வீட்ல உங்களுக்குக் கொடுக்க முடியாததை கணவன்கிட்ட எதிர்பார்க்கி றீங்க...''

''நிச்சயமா...'' என்றாள். ''தப்பா?''

''தப்புன்னு எதுவுமில்லை... நாளைக்கிக் குழந்தை குட்டின்னு ஆயிட்டா எப்படி... எதில கவனம் செலுத்துவீங்க...?''

''அது பாட்டுக்கு அது... இது பாட்டுக்கு இது...''

''ஆத்தில ஒரு கால்... சேத்தில ஒரு கால்'னு ஆயிடாதா?''

''சும்மா பழமொழி சொல்லியெல் லாம் என்னைக் குழப்பப் பார்க்காதீங்க! நான் தெளிவா இருக்கேன்...''

''சரி...'' என்று யோசித்து விட்டு, ''இதுக்கு நான் சம்மதிக்கலேன்னா...?'' என்றான்.

''ஸோ சிம்பிள்! பெண்ணைப் பிடிக்க லேன்னு சொல்லிடுங்க!''



''அந்த ஆசாமி அப்ரூவராக மாறிட் டாரே ஒழிய அவர் குடுக்கிற ஸ்டேட் மெண்ட் சம்பந்தமில்லாமல் குழப்புது!''

''அப்ப 'தப்ரூவர்'னு சொல்லுங்க!''

- வேதபுரி எஸ். ரமேஷ்.

விவேகானந்தன் ஒருமுறை மனசை உலுக்கிக் கொண்டான். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு உலகம். கற்பனைகள், ஆசைகள், லட்சியங்கள்.

''நான்தான் முதல் முறையா உங்களைப் பொண்ணு பார்க்க வந்திருக் கேன்னு நினைக்கிறேன்...''

''ஆமாம்...''

''ஓகே!'' என்றான். எழுந்து கொண் டான்.

''என்ன எழுந்துட்டீங்க! பேசலை...?''

''மறந்து போச்சு!'' என்று சொல்லி விட்டு வெளியே போனான். அக்கா மெது வாய் அருகே வந்து, ''என்னாச்சு?'' என் றாள்.

''வீட்ல பேசிக்கலாம்...''

எல்லோரும் இவர்கள் முகத்தைப் பார்க்க, அதே வழக்கமான...

''வந்து சொல்றோம்...''

**ப**ஸ்ஸில் போகும் போது அக்கா மீண் டும், ''என்னாச்சு?'' என்றாள்.

''என்னை மாதிரியே நிறைய குழப் பங்கள் இருக்கு...''

''புடிச்சிருக்கா இல்லியா?''

''தெரியலை...'' என்றான்.

''அண்ணே! நீங்க ஆளுங்கட்சிக்குப் போகப் போறது தலைவருக்குத் தெரிஞ்சுப் போச்சு!

''ஐயையோ... அப்புறம்?''

''உங்க முடிவை நீங்க மாத்திக்க லைன்னா உங்களுக்கு முன்னாடி அவர் அங்கே போயிடுவாராம்!''

- ஞா. ஞானமுத்து.





## 46. பட்டரின் ஏமாற்றம்

அர்த்தசந்திர வளைவாக அமைந்திருந்த காந்தளூர்ச் சாலையின் அந்த கடற்கரைப் பகுதியில், இயற்கை தன் அழகையெல்லாம் கொட்டி நிறைத்திருந்தது. கடற்கரையை ஒட்டி, வெகு தூரத்துக்குத் தொடர்ந்து வளர்ந்திருந்த தென்னைகள், கடற்காற்றில் ஆடிக் கொண்டும் சில நீர்ப் பரப்பை எட்டிப் பார்த்தபடியும் இருந்தன. மேலைக் கடலின் கோப அலைகளும் சற்று சாந்தப்பட்டு, கரையை நோக்கி மெல்லவே உருண்டன.

வளைவான கரைப் பகுதியை இணைத்து, வரிசையாக நின்ற சேரர் போர்க் கலங்கள், இரு அரபு வணிகக் கலங்களுக்கு விலகி வழி விட்டு, துறைமுகத்தினுள் செல்ல அனுமதித்து, மீண்டும் வரிசையை இணைத்தன. கலங்களில் வீரர்கள் நிறைந்திருந்ததும் வரிசையாக நிறுத்தப்பட்டிருந்த பொறிகளும் அந்தத் துறைமுகத்தை நெருங்குவதோ, அதைத் தாக்க முயல்வதோ, எவ்வளவு கடினம் என்பதை நிரூபித்தன.

துறைமுகத்தில் பெரும் மரப் பேழைகளைச் சுமந்து இறக்கிக் கொண்டிருந்த அராபிய அடிமைகளையும் நீண்ட பலகைகளைப் பாலம் போல அமைத்து, புரவிகளைக் கரைக்கு இறக்கிய அரபு வணிகர்களையும் பார்த்தபடி, சற்றுத் தொலைவில் ஒரு மாளிகையின் மேன்மாடத்தில் நின்றிருந்தான், அந்தக் கடற்படைத் தளத்தின் சேரர் தலைவன் தாணுரவி. சற்று மெலிந்திருந்தாலும் நன்றாக உரமேறிய அவன் தேகம், ஏதோ இரும்பில் வார்த்தது போலிருந்தது. யானையின் விழிகளைப் போல் சிறிதாகப் பளபளத்த அவன் விழிகளும் இடையில் தொங்கிய பட்டையான வாளும் அவன் அச்சமென்பதையே அறியாதவன் என்பதைப் புலப்படுத்தின.

மூன்று பக்கங்களிலும் நெடுஞ்சுவர் போல் எழுந்து நின்ற மலைப்பகுதி, பெரும் பாதுகாப்பு அளித்தாலும், அந்தப் பாதுகாவல் போதாதென்றுதானோ என்னவோ, கோட்டை சக்கர வட்டமாக அமைக்கப்பட்டிருந்தது. ஒரு வாயிலுக்கு நேர் மறுபுறத்தில் மறுவாயில் இருந்தாலும் மதில்கள் இரு சக்கரங்களாக உருவாகியிருந்ததால் உள்ளே நுழையும் எந்த எதிரியும் அடுத்த வாயிலை அடையுமுன்னர் மதில்களிடையே வரும் பக்கவாட்டுத் தாக்குதல்களைச் சமாளிக்க வேண்டியிருக்கும். இடையில் பொருத்தப்பட்டிருக்கும் பொறிகளை மீறி, எதிரி மறுவாயிலை அடைவது துர்லபம். இவ்வாறு அந்தக் கோட்டையை நிர்மாணித்த தன் முன்னோர்களைப் பெரிதும் வியந்திருக்கிறான் சேரர் தலைவன். மாளிகையின் மேன்மாடத்தில் நின்ற அவன் முகத்தில் திருப்தி நிலவியது.

அதைக் குலைக்கவே உருவானது போல, துறைமுகத்தில் பெரும் கூச்சல் எழுந்தது. சரக்குகளை இறக்கி விட்ட அரபுக் கலம் ஒன்று திடீரெனத் தீப்பற்றி எரியத் தொடங்கியது. அதன் நங்கூரத்தையும் யாரோ இழுத்து விட்டிருக்கிறார்கள் என்பதை, அது எரிந்தபடியே சேரர் போர்க் கலங்களின் வரிசையை நோக்கி நகர்வதைக் கவனித்துப் புரிந்து கொண்டான் தாணுரவி. எரிந்த அந்தக் கலத்திற்கு வழி விட, சேரர்

**விஷ்வக்சேனன்**

# பாண்டியன் மகள்



கலங்களின் அணிவகுப்பு சற்றே தளர்ந்து விலகிய அதே தருணத்தில், பக்கவாட்டில் தென்னைகளின் மறைவிலிருந்து வரிசை யாக வெளிப்பட்ட கலங்களையும் அவற் றில் பறந்த புலிக் கொடிகளையும் கண்ட தாணுரவி, நேர்ந்தது விபத்தல்ல என்ப தையும் தாக்குதலின் முதல் கட்டமே என்ப தையும் உடனே புரிந்து கொண்டு, வெகு வேகமாகக் கீழே இறங்கிச் சென்றான். உத்தரவுகளைப் பிறப்பித்தபடியே அவன் விரைய, அதே நேரத்தில் கோட்டையின் கதவுகள் தாக்கப்படும் ஒலியும் எழுந்தது! வீரர்களை அணிவகுக்க உத்தரவிட்ட தாணு ரவி, வாயிலை அடைவதற்கும் கதவுகள் பெயர்ந்து தடாலென விழுவதற்கும் சரியாக இருந்தது.

தனது பெரும் சாம்பல் நிறப் புரவியில், பூரண போர்க்கவசத்துடனும் நீண்ட வாளை உயர்த்தியபடியும் கோட்டைக்குள் பிரவே சித்தான் குலோத்துங்கன்!

+

சேரன் தலைநகரான கொல்லத்தின் அந்தப் 'பெரிய கடைவீதி' என்றைக்கும் போல் அதே பரபரப்புடனிருந்தது. யவன ரும், சீனரும், அராபியரும், மற்ற தமிழகத்து வணிகர்களும் இட்ட வியாபாரக் கூச்சல்கள் செவிகளைத் தாக்கின. ஆனால் வழக்கத் துக்கு மாறாகக் கைகளில் வாட்களும் வேல் களும் தாங்கிய சோழ வீரர்களின் நடமாட் டம் மட்டும் அதிகரித்திருந்தது.

இரவு ஏறத் தொடங்கி விட்டதால் ஆங் காங்கே எரிந்த பந்தங்களும் யவனர் விளக்கு களும் இரவைப் பகலாக்க முயன்று கொண் டிருந்தன. பொன்னும் மணியும் பட்டும் ரத்தினங்களும் மின்னியதை விட, வீரர் களின் கைகளிலிருந்த வேல்களும் இடை யில் தரித்திருந்த வாட்களும் அதிகமாகவே மின்னிக் கொண்டிருந்தன.

கோட்டையை நோக்கி வளைந்து சென்ற பாதையிலும் கோட்டைக்கு நேரி டையாகச் செல்லும் மலைச்சரிவுப் படி களின் அருகிலும் நிலைமை வேறாக இருந் தது. பந்தங்கள் வழியெங்கும் பிரகாசமாக எரிந்தன. சோழ வீரர்களைத் தவிர, சாதாரண மக்கள் அனுமதிக்கப்படாததால், அந்தப் பகுதி அசாதாரண அமைதியுடனிருந்தது. உச்சியிலிருந்த சேரலாதன் கோட்டையிலும் அரண்மனையிலும் எப்போதும் போல் விளக்குகளும் பந்தங்களும் ஜாஜ்வல்யமாக எரிந்து கொண்டிருந்தன. ஆனால் எப்போ தும் அதன் உச்சியில் பறக்கும் வில்லும் அம்பும் பொறித்த கொடிக்குப் பதிலாகப் பெரும் புலிக்கொடி பறந்து கொண்டிருந் தது!

குளிரை அள்ளி வீசிய மலைக்காற்றை லட்சியம் செய்யாமல், மேலே வெறும் வஸ் திரமொன்றை மட்டுமே போர்த்தி, பன் னிரண்டு திருநாமங்களையும் உடலில் சார்த்தி, அரண்மனையின் குட்டையான சுற்றுச் சுவரில் ஒரு காலை ஊன்றியவாறு நின்றிருந்தார் திரு நாராயணபட்டர். அவரது நிச்சலனமான பார்வை, தூரத்தில் அகன்ற வெள்ளித் தகட்டைப் போல பிரதிபலித்த

அஷ்டமுடி ஏரியின் மீதும் அதைச் சுற்றி அமைந்திருந்த கூடாரங்களின் மீதும் அங்கு உலவிய வீரர்களின் மீதும் பதிந்திருந்தது. அவர் காதுகளில் அணிந்திருந்த கடுக்கன் மேல்தளத்தில் எரிந்த பந்தங்களின் ஒளியில் பிரகாசித்ததையும் அதைவிட அபாரமாக அவரது பெருவிழிகள் ஜொலித்ததையும் பார்த்தபடி நின்றிருந்த சேரலாதன் பாஸ்கர வர்மன் முகத்தில் வியப்பே படர்ந்து கிடந்தது. பின்னால் இரு கைகளையும் வெகு பவ்யமாகக் கட்டிக் கொண்டு நின்றிருந்த அமைச்சரின் கரங்களில் இருந்த ஓலை அந்தக் காற்றில் படபடத்துக் கொண்டிருந்தது.

மணிமணியான எழுத்துக்களில் மன்னன் குலோத்துங்கனது வருகையை அறிவித்த அந்த ஓலையை, மீண்டும் ஒருமுறை பார்த்த அமைச்சரின் பெருமூச்சு குளிர் காற்றில் கலந்தது.

இரண்டு நாட்கள் முன்பு வரை சேரவது கொடி பறந்த இடத்தில் இன்று புலிக்கொடி பறப்பதையும், அந்த அரண்மனையில் தலைநிமிர்ந்து உலவிய பாஸ்கரவர்மனும் தானும் இன்று இந்தப் பிராமணன் வாயிலிருந்து உதிரும் வார்த்தைகளுக்காகக் காத்துக் கைகட்டி நிற்க வேண்டிய நிலை வந்ததையும் எண்ணி, மீண்டும் ஒரு பெருமூச்சை உதிர்த்த அமைச்சர், மெல்ல தொண்டையைக் கனைத்துக் கொண்டார்.

''தாங்கள் கூறியபடியே அனைத்து ஏற்பாடுகளையும் செய்து முடித்து விட்டேன் நாராயண பட்டரே!'' என்ற அமைச்சர், வயதில் பட்டரை விட மூத்தவராக இருந்தாலும் பட்டரின் பெயரை உச்சரித்த அவர் குரலில் சற்று நடுக்கம் இருக்கவே செய்தது.

திருநாராயணபட்டரின் பெருவிழிகள் திரும்பி, மன்னனையும் அமைச்சரையும் நோக்கின.

''மாறவர்மனையும் அவன் சகாக்களையும் மதுரைக்கு அனுப்பியாகி விட்டதா?''

''ஸ்ரீ வல்லபருடன் அவர்களை அனுப்பி விட்டேன்.''

''நாளை மன்னரை வரவேற்க ஏற்பாடுகள் ஆயிற்றா?''

''அனைத்தும் சித்தமாயிருக்கின்றன.'' பதிலளித்த அமைச்சரை நோக்கித் திரும்பிய பட்டரின் குரல், அடுத்து சற்று கனிவுடன் ஒலித்தது.

''அரையன் மதுராந்தகன் வந்து விட்டானா?''

''யார் சமுத்திரபந்தரா?'' அமைச்சரின் பதில் கேள்வி பட்டரின் முகத்தில் முறுவலொன்றைத் தருவித்தது.

''ஆம், சமுத்திரபந்தன்தான்.''

''அவர் இதுவரை திரும்பியதாகத் தெரியவில்லை.''

''சரி. காலிங்கராயனை நான் அழைத்ததாகக் கூறுங்கள்.''

''உத்தரவு'' என்று வணங்கிய அமைச்சர் திரும்பி நடந்தார். அதுவரை மௌனமாயிருந்த பாஸ்கரவர்மன் சற்று சங்கடத்துடன் அசைந்தான்.

''சேரலாதா!'' பட்டரின் குரல் அவனைக் கனிவுடன் அழைத்தது.

''காத்திருக்கிறேன்'' என்றான் பாஸ்கரவர்மன்.

''என்னை ஏமாற்றி விட்டாய் நீ!''

''என்ன கூறுகிறீர்கள்?'' சேரலாதன் குரலில் லேசான பதற்றம் தெரிந்தது.

''உன் தலைநகரில் கடுமையான போரை எதிர்பார்த்து வந்தேன்...''

பாஸ்கரவர்மன் ஆயாசப் பெருமூச்சு விட்டான். பட்டர் தொடர்ந்தார்: ''நீ குலோத்துங்கனுக்குச் சிற்றரசனாயிருக்கச் சம்மதிக்கிறாயா?''

''மனப்பூர்வமாகச் சம்மதிக்கிறேன், தாற்காலிகமாக.''

பட்டரின் புருவங்கள் சற்று மேலேறின. சேரலாதனின் சிந்தனை படர்ந்த முகத்தை

## அருள்வாக்கு

ஜீவர்கள் என்று நாம் இருக்கிறோம். நாம் வாழ்க்கை நடத்துகிற ஜகத் என்று ஒன்று இருக்கிறது. இந்த இரண்டையும் உண்டாக்கி, நடத்திக் கொண்டிருக்கிற ஈச்வரன் என்று ஒருத்தன் இருக்கிறான். 'ஜீவ-ஜகத்-ஈச்வரன் என்கிற இந்த மூன்றும் என்ன? இந்த ஜகத் வியாபாரத்தில் ஜீவன் இன்பத்துக்கும் துன்பத்துக்குமிடையே ஊசலாடிக் கொண்டிருப்பது போல் இல்லாமல், இவன் சாச்வதமான இன்பத்திலேயே இருக்க வேண்டுமானால் அதற்கு என்ன செய்ய வேண்டும்?' என்று ஆராய்ந்து,' அநுபவ ரீதியில் பதில் சொல்வது தான் உபநிஷத்துக்கள் எல்லாவற்றுக்கும் பொதுவான லக்ஷியம். இவை முடிவாகச் சொல்வது என்ன?

பிரம்மம் என்கிற ஒரு பரம்பொருள்தான் ஜீவன், ஜகத் இரண்டுக்கும் காரணம். அந்தக் காரணமும் அதன் விளைவான ஜீவ-ஜகத்துக்களும் வேறு வேறு இல்லை. ஏனென்றால் பிரம்மத்துக்கு வேறாக எதுவுமே இருக்க முடியாது. இப்போது ஜகத்தையே நிஜம் என்று நினைக்கிற ஜீவாத்மா, அதை ஒதுக்கி விட்டு, தன்னையே யார் என்று விசாரம் பண்ணிப் பார்த்துக் கொண்டால், 'உடம்பு நானில்லை, இந்திரியங்கள் நானில்லை, மனஸ் நானில்லை, புத்தி நானில்லை, பிராணன் நானில்லை' என்று ஒவ்வொன்றும் கழன்று போய், கடைசியில் தான் பிரம்மமே என்று



அறிந்து கொள்வான். 'பரமாத்மா என்று ஒன்று ஜீவாத்மாவைப் படைத்தது என்று சொல்வது கூட ஒரு மாயைதான். ஜகத்தெல் லாம் அந்த மாயையின் விளையாட்டுதான். வாஸ்தவத்தில் பரமாத்மா ஜீவாத்மா என்ற பேதமில்லாமல் ஆத்மா என்ற ஒன்றுதான் இருக்கிறது. அந்த ஒன்றே ஸத்தியம்' என்று தெரிந்து கொள்கிறான். அப்படி ஸத்தி யத்தோடு இரண்டற (அ-த்வைதமாக) இருக் கிற போதுதான் சுக-துக்க ஊசலாட்டம் போய் ஒரே சாச்வத இன்பமாக, சாந்தியாக ஆகிறது. அதுதான் மோக்ஷம்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்க ராச்சார்ய சுவாமிகள்.

ஏறெடுத்து நோக்கிய பட்டர், "விளக்க மாகச் சொல், பாஸ்கரவர்மா! படைகளைக் கண்டு அஞ்சும் கோழையல்ல நீ என்பதை அறிவேன். பெரும் யுத்தத்தை எதிர்பார்த்து வந்த எனக்குக் கொஞ்சம்.... கொஞ்ச மென்ன, பெரும் ஏமாற்றம்தான்" என்றார்.

சற்று நேரம் மௌனமாயிருந்த பாஸ் கரவர்மன் கூறினான் : "நான் பட்டமேற்று ஓராண்டு கூட இன்னும் முடியவில்லை."

"உண்மைதான்."

"மன்னர் மறைந்த பிறகு, அவரது உற வினன் என்ற முறையில்தான் அரியணை யேறினேன். அரசியலில் எனக்கு இன்னும் அனுபவ அறிவு போதாது."

**பா**ஸ்கரவர்மன் இப்படி பட்டவர்த் தனமாக ஒப்புக் கொள்வது நாராயண பட் டரை பிரமிக்க வைத்தது.

"திகைக்க வேண்டாம். உண்மையை ஒப்புக் கொள்ள நான் என்றும் தயங்கிய தில்லை. அரச போகத்தையும், சுகத்தையும் நான் ஆரம்பத்தில் விரும்பவே செய்தேன். போகப் போக சுதந்திரமற்ற இந்த வாழ்வு எனக்குக் கசந்து விட்டது."

"அரச பீடத்தில் அமரும் மன்னர் அனைவருக்கும் முதலில் ஏற்படும் உணர்வு தான் இது."

"அது மட்டுமல்ல. என் அனுபவக் குறைவு இங்குள்ள பல தலைவர்களுக்குச் சாதகமாக அமைந்து விட்டது."

"அப்படியா?"

"ஆம். பலர் என்னை மீறி ஈழத்துடனும் யவனருடனும் பாண்டியருடனும் தொடர்பு கொள்ளத் தொடங்கி விட்டனர். எனது படைத்தலைவன் கங்காதரனும் அத்தகைய வன்தான்."

நாராயணபட்டருக்கு அவன் எண்ண ஓட்டம் மெல்ல விளங்கியது.

"என்னால் என் படைத் தலைவர் களைக் கூட கட்டுப்படுத்த இயலவில்லை. எனது அமைச்சர்களும் சுயலாபம் கருதி என்னைப் பயன்படுத்த முனைந்தார்கள்."

"அப்படியா?"

"ஆம். இன்னும் கொஞ்ச காலத்தில் வேற்று நாட்டு ஆதிக்கம் இங்கு வேரூன்றி யிருக்கும். அதைத் தவிர்க்க, மாற்றானை விட தமிழ் மன்னன் ஒருவனின் ஆதிக்கம் இங்கு இருப்பது மேல் என்ற முடிவுக்கு வந்தேன். என் அனுபவ அறிவை வளர்த்துக் கொள்ளவும் இந்த இடைக்கால ஆதிக் கத்தை விரும்பினேன்."

"அப்படியானால்..." நாராயணபட்ட ரின் குரலில் சந்தேகம் ஒலித்தது.

"நான் என்னையே ஸ்திரப்படுத்திக் கொண்ட பிறகு, சேர மக்களும், தலைவர்க ளும் என் ஆணைக்குக் கட்டுப்படத் தொடங் கிய பிறகு, இந்தச் சேர நாட்டை குலோத் துங்கனின் சிற்றரசு என்ற நிலையிலிருந்து விடுவிக்க நடவடிக்கை எடுப்பேன். அப் போது என் உயிரையும் பணயம் வைத்து, களத்தில் சோழ மன்னனையும் உங்களை யும் சந்திப்பேன்."

நாராயணபட்டர் முகத்தில் பெருமை படர்ந்தது. பாஸ்கரவர்மனது தெளிந்த சிந்த னையும், பிற நாட்டின் ஆதிக்கத்தை விரும் பாத அவன் போக்கும், அனுபவமும் அறி வும் பெற சிற்றரசாக இருக்க ஒப்புக் கொண்ட ராஜதந்திரமும் அவரைக் கவர்ந் தன. எதிர்காலத்தில் சோழ நாட்டுக்குத் தெற்கில் அபாயமென்று ஏற்படுமானால், அது இவனால்தான் ஏற்படக்கூடும் என்று தீர்மானித்துக் கொண்டார்.

சேரலாதனைப் பட்டர் பார்த்த பார்வை யில் வியப்பும் பெருமிதமுமே தெரிந்தது. துணிவுடன் உண்மையே பேசும் அந்த சுத்த வீரனைப் பெரிதும் சிலாகித்தார் அவர். பிற்காலத்தில் தனது லட்சியத்திற்காக இறுதி வரை போராடி மடிந்த பாஸ்கரவர்மன், இருந்தபோதும் சரி, இறந்த போதும் சரி

## என் இனிய அரசாங்கம்!



**ப**ல்லில்லாத பாட்டிக்குப்
பற்பொடி இலவசம்!

காலில்லாத முடவர்க்குக்
காலணி இலவசம்!

தேர்தல் காலம் வந்ததும்
வேட்டி இலவசம்!

தாய்க்குலத்தின் வோட்டு வாங்கச்
சேலை இலவசம்!

பள்ளிக்கூடப் பிள்ளைகட்கு
உணவு இலவசம்!

அடுத்துவந்த ஆட்சியிலே
முட்டை இலவசம்!

ஆளுக்கொரு வேலை என்று
அறிக்கை இலவசம்!

அதிநவீன அரசுத்தொட்டில்
படுக்கை இலவசம்!

இத்யாதி... இத்யாதி
இலவசத் திட்டங்கள்
எங்களூர் வருவதற்குள்....
இந்தியத் தமிழன்
இறந்தே போனான்...!

அரசே......
'பாடை இலவச'த் திட்டம்
பரிசீலனையில் இருக்கிறதா?

- நா. வே. அருள்

பட்டரின் எண்ணத்தில் பெருமதிப்புடனே வாழ்ந்திருந்தான்.

**கா**டா அல்லது நந்தவனமா என்று கூற இயலாதபடி இருந்த அந்தப் பகுதியில், மலைச்சரிவில் அமைந்திருந்த அந்த மாளிகை, அன்றும் அதே அழகுடன்தான் இருந்தது. சில நாட்களாகக் கவனிப்பாரின்றிப் போனாலும் இயற்கையாகவே குளிர் நிறைந்த பகுதியாவதால் பாதையின் இரு பக்கங்களிலும் தலையாட்டி வரவேற்ற வண்ண மலர்கள், இன்னும் அதே அழகுடன்தானிருந்தன. மலர்களின் சுகந்தத்தையும் மூலிகைகளின் மணத்தையும் சேர்த்து, மலைக்காற்று அந்த மாளிகையை நோக்கி வீசத்தான் செய்தது.

ஆனாலும் மார்த்தாண்டனின் உள்ளத்து உஷ்ணத்தைத் தணிக்க எவற்றாலும் இயலவில்லை. அவன் உடலிலிருந்த காயங்களை விட உள்ளத்துக் காயமே அதிக வேதனை தந்து கொண்டிருந்தது. அவனையும் மாறவர்மனையும் முன்னம் அந்த மாளிகையில் தங்கவைத்து உபசரித்த சேரர் படைத்தலைவன் கங்காதரனும் மடிந்து விட்டான் என்பதையும், மாறவர்மனை மதுரைச் சிறைக்கு அனுப்பி விட்டான் சோழன் என்பதையும் அவன் அறிந்திருந்தான். எளிதில் கலங்காத அவன் உள்ளத்தையும் அடைந்து விட்ட படு தோல்வி கலங்க வைத்திருந்தது.

மேலைமங்கலத்திலிருந்து துவங்கி, சேர நாட்டிலும், கொற்கையிலும், பின் கோட்டாறிலும் பாண்டியரின் இந்த வீழ்ச்சிக்கு முழுக்க முழுக்கக் காரணமாயிருந்தவன் சமுத்திரபந்தன் என்பதையும், பாண்டியரை முறியடிக்க அவன் திட்டம் வகுத்து நீண்ட நாட்களாகின்றன என்பதையும் மார்த்தாண்டன் புரிந்து கொண்டான்.

மதுரையின் கோட்டையிலும் அரண்மனையிலும் இன்னும் தனக்கு மிக நெருங்கிய நண்பர்களும், வீரர்களுமிருப்பதை நினைத்தவன், மாறவர்மனைச் சிறை மீட்கவும் தங்களின் இந்த நிலைக்கு முதற் காரணமாக இருக்கும் பாண்டியன் மகளை எப்படியும் அழிக்கவும் தீர்மானத்துடன் எழுந்தான்.

பாண்டியன் மகளை மதுரை அரியணையில் அமர்த்துவதே சோழனின் நோக்கமாக இருக்கும் என்பதை யூகித்தவன், அந்த மாளிகையில் தன்னுடன் எஞ்சியிருந்த பாண்டிய வீரரை அழைத்துக் கொண்டு அன்று இரவு மதுரையை நோக்கிப் பயணப்பட்டான்.

(தொடரும்)

# ஒருபுறம் சிரிப்பு; மறுபுறம் பரிதாபம்!

◆ கல்கி தந்த தீபாவளி ஸ்வீட்டில் ரொம்பவும் சுவையானது, வைரமுத்து ரகுமான் பேட்டியே.

''வாக்கப்பட்டு வண்டிகட்டிப் போற பொண்ணே!
வலதுகண்ணைப் பிரிஞ்சிபோற இடதுகண்ணே!

இதுவரை யாரும் சொல்லாத புதிய உத்தியைக் கையாண்டு, பிரிவின் சோகத்தைப் பாட்டால் படம்பிடித்து விட்டார் வைரமுத்து.

திருவாரூர் - 2, அமுதா தமிழ்நாடன்.

◆ ''இப்படித்தான் பிறக்கிறது இவர்கள் பாட்டு...'' படித்த போதுதான், பாடலின் உயிர்ப்பினையே மாற்றிவிடக் கூடியதான 'மெட்டுக்குப் பாட்டெழுதுவதை' வைரமுத்து ஏன் கண்டிக்கிறார் என்று தெளிவாகப் புரிந்தது.

கருங்காலி, கரு. பி. கார்த்திகேயன்.

◆ கலைஞர் - வை.கோ. மோதல் பற்றிய கார்ட்டூன் வாய் விட்டுச் சிரிக்க வைத்ததுடன், கட்டுக் கோப்புக்குப் பெயர் 'போன' தி.மு.க.வின் இன்றைய நிலையினை நினைத்துப் பரிதாபப்படவும் வைத்தது.

பவித்திரமாணிக்கம், ஆர். பாஸ்கரன்.

◆ 'சுற்றுச் சூழல் - மிரட்டும் உண்மைகள்' படித்தேன். தீபாவளி மகிழ்ச்சியையும் தாண்டி, ஒரு இனம்புரிய சோகம் உறைத்தது. நாம் நமது சந்ததியினருக்கு இந்த அழகான உலகை விட்டுச் செல்வோமா என்ற ஐயமே எழுந்தது.

மருங்கூர், பாலு. கிருஷ்ணமூர்த்தி.

◆ 'கவிட்ரவி'யின் ஜோக்குகள் அனைத்தும் அருமை. ஒவ்வொன்றும் அவர் பெயரைப் போலவே இனிப்பாகவும், சுவையாகவும் இருந்தது.

வலங்கைமான், பி. நூர்தீன்.

◆ அகிலா கார்த்திகேயனின் ''மறதி மருந்துவா!'' கவலைகளை மறந்து மனம் விட்டுச் சிரிக்க வைத்தது என்றால், பாக்கியம் ராமசாமியின் ''அப்புசாமியும் ஸ்வீட் விக்கலும்!'' வாய் விட்டு உடல் குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைத்தது.

வேட்டைக்காரன்புதூர், பி. ஜெயப்பிரகாஷ்.

◆ எல்லாத் துறைகளையும் தன் தலையில் போட்டுக் கொண்டு, இப்போது தொழிலாளர்களின் ''ஷாக்'' ட்ரீட்மெண்டினால் நிலை குலைந்து போயிருக்கும் அரசுக்குத் தங்களுடைய தலையங்கத்தைப் படித்த பிறகாவது புத்தி தெளிந்தால்தான், இனிவரும் காலங்களிலாவது மக்கள் நிம்மதியாக நாட்களைக் கழிக்க முடியும்.

சென்னை - 94, எஸ். தட்சிணாமூர்த்தி.

◆ முன்னறிவிப்பின்றி மின்னல் வேகத்தில் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்ட போக்குவரத்து ஊழியர்களையும், மக்களை இக்கட்டில் ஆழ்த்தித் துன்பமடையச் செய்த, தமிழக அரசின் மெத்தனத்தையும் கண்டித்துத் தலையங்கம் வடித்த 'கல்கி'க்கு பாராட்டுக்கள்.

சென்னை - 23, கி. ராமதாஸ்.

◆ ''விண்முகட்டில் வேணுகோபாலன்!'' படிக்கப் படிக்க மனதில் இனம்புரியாத மகிழ்வு. பலமுறை படவேடு சென்று வந்து இருக்கிறேன். ஆனால் இத்தனை சிறப்பினைப் பெற்ற ஊர் என்பதை அறியவில்லை! சரித்திரச் சான்று - புராண சிறப்பு - இவைகளை அறிந்த போது அடுத்த முறை செல்லும் போது வேணுகோபாலன் ஆலயம் செல்ல வேண்டும் என்கிற உறுதி ஏற்பட்டு விட்டது.

திருவண்ணாமலை, என். சண்முகம்.

◆ 'விஸ்வரூபம்' படித்தேன். தலைமுறை இடைவெளியின் காரணமாக, இளைய தலைமுறையினருக்கும் பெற்றவர்களுக்கும் இடையே தோன்றும் மனக் கசப்பினால், பெரியவர்களுக்கு ஏற்படும் மனச் சோர்வை ஒரு சிறுகதையின் மூலம் விளக்கி, அவ்வாறு செய்யும் இளையதலைமுறையினரின் நெஞ்சை நெருடச் செய்த ஆசிரியர் கிருஷ்ணாவுக்குப் பாராட்டுக்கள்!

காட்பாடி, அ. சோ. விஸ்வநாதன்.

◆ 'சிரிக்க வைத்த ஜோக்' என்ற கேள்விக்குத் தங்கள் பதிலைப் படித்தேன். அதைப் படித்த போது எனக்குச் சிரிப்பு வரவில்லை. கவலைதான் வந்தது.

கோவை, ஏ.ஜி. கல்யாணசுந்தரம்.

◆ 'தரணி சர்க்கரை ஆலை', அவர்களுக்குத் தேவையான மின்சாரத்தை ஆலையிலேயே உற்பத்தி செய்து கொள்வதாக ஆச்சரியத்துடன் வெளியிட்டு இருந்தீர்கள். ஆனால் இந்தியாவிலேயே முதன் முறையாக திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம் செய்யாறில் உள்ள செய்யாறு கூட்டுறவு சர்க்கரை ஆலையில் மின்சாரம் உற்பத்தி செய்து, ஆலையின் தேவைக்குப் போக பல லட்சக்கணக்கான யூனிட்களை கடந்த மே 93 முதல் தமிழ்நாடு மின்சார வாரியத்திற்கும் விற்பனை செய்து வருகிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எம். சீனிவாசன், இளநிலை உதவியாளர்,
செ.கூ. சர்க்கரை ஆலை.

வட்டமேஜை

**உ**ங்களுக்குப் 'பழையாறை' தெரியுமா? அமரர் கல்கியின் 'பொன்னியின் செல்வன்' வாசிக்காமல் விட்டிருக்க மாட்டீர்கள். அந்த அமர காவியத்தை வாசித்தவர்களில் நீங்கள் ஒருவராக இருக்கும் பட்சத்தில் இந் நேரம் உங்களுக்குப் 'பழையாறை' நினைப்புக்குள் வந்திருக்கும்.

புகழ்பெற்ற அந்த 'பழையாறை' ம்ஹூ‍ம்... இன்றைய பளையாத்து சிவன் கோயில் வெளி மண்டபத்தின் வெளித் திண்டொன்றில் அமர்ந்திருந்தார்கள் வாக இடங்காப்பிறந்தாரும் முத்தையா இடங்காப் பிறந்தாரும். இருவருக்குமே அறுபதைத் தாண்டி வயக சொல்லலாம். இன்னமும் தேகம் உடையாத கட்டுடல், தக்காளிப் பழம் மாதிரி. அறுபதாவென்று கேட்டு வியக்கும் உடல்வாகு. ஒய்ந்து குந்தின மனுஷர்கள்.

வயது எத்தனைதான் ஆனால் என்ன, ஒருநாளும் வாய் அரட்டை மட்டும் ஓயவே ஓயாது. அது ஒரொருத்தருக்கும் சின்ன வயசிலிருந்தே கூடப் பிறந்த குணம். வெற்றிலைச் சாறுடன் புகையிலையைக் 'கொறட்டில்' அடக்கிக் கொண்டு லங்கீதம் பண்ணிக் கொண்டிருந்தார்கள் இருவரும். ஏது, லங்கீதத்தில் தாள லய கத்தம் பிசகாமல் பாடும் வித்தகரோ என்று அதற்குள் யாரும் கணக்குப் பண்ண வேண்டாம். அது ஒரு மொழி.



சி. எம். முத்து

# ஜாதகம்

தாள கத்தத்துக்கும் லயகத்தத்துக்கும் அடங்காத தனிமொழி. ஸ்வரத்துக்குள் வரவே வராத பாஷை. பேச்சுத் திறன் அப்படி. ஸங்கீதம் தெரியாதவன் பாடுகிற மாதிரி வழவழா கொழ கொழா என்றிருக்கும். சதா வெற்றிலை போடும் ஷோக்காளிகளுக்குத் தான் அந்த ஸங்கீத (ம்ஹூம் சங்கேத) பாஷை புரியப் புரியும்.



உதாரணத்துக்காக ஒன்றே ஒன்று. 'எங்கடா போற?' என்கிறதை அவர்கள் 'ஹெங்கழாப் போற' என்பார்கள். அந்த கடைசி 'ற' கூட தேய்ந்து மழுங்கி காற்றாய் வெளிக்கொட்டும்.

கொஞ்சமாய் காவியேறிப் போயிருந்த கதர்வேஷ்டியுடன்தான் இருவரும். அட்டாணிக்கால் போட்டு குந்திக் கிடந்தார்கள். பழையாத்துப் பேர்வழிகளே கொஞ்சம் டம்பமான பேர்வழிகள்தாம். கதர் டாம்பீகத்துக்கும் பந்தாவிற்குமென்றே பிறந்தவர்கள். இந்தக் காலத்திலும் ஊருக்குள் செருப்புப் போட்டு நடக்காத இளைஞர்களையும் நடுத்தரவாசிகளையும் இந்த ஊரில்தான் காண முடியும். வயசானவர்கள் இருக்கிறார்களே என்று அத்தனை மட்டு மரியாதை. செருப்பு போட்டு நடக்கிற விஷயமெல்லாம் ஊருக்கருகே ஓடும் திருமலைராஜன் ஆற்றைத் தாண்டித்தான். தொந்தியும் தொப்பையுமாய்ச் சட்டையில்லாத மேனி. வாய் மணக்க வெற்றிலையைக் குதப்பிக் கொண்டு, வெற்றுடம்பாய், கோயில் பக்கமிருந்து வெளி மண்டபத்து வழியாய்ப் பூந்து வருகிற காற்றை (ஆமாம் எங்கேயும் கிடைக்காத காற்று கோயில்களிலிருந்துதான் அபாரமாய் வரும். இது கோயில்களுக்கே உரிய தனி ஸ்பெஷாலிட்டி. உலகத்துக் காற்றையெல்லாம் கோயில் கடவுளர்கள் குறைந்த கொள்முதலுக்கு வாங்கிக் கொண்டு சேமித்து வைத்திருக்கிறதைக் கொஞ்சம் கொஞ்சமாய் விட்டுக் கொண்டிருக்கிறார்களோ என்று தோன்றும்) ஆனந்தமாய் வாங்கிக் கொண்டு பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

ஊர் வம்பு தும்பை - அது சற்று ஸீரியஸ்லான மேட்டராக இருந்தாலும் கூட - இப்படி அரட்டையாகப் பேசிக் கொள்ள இந்த மாதிரி அறுபது வயசுக்காரர்களால்தான் முடிகிறது.

இப்போது கூட ஊருக்குள் எப்போதோ நடந்து முடிந்து போயிருந்த படு ஸீரியஸ்லான மேட்டரைத்தான் என்னமோ மாமன் மச்சான் முறையுள்ளவர்கள் மாதிரி தமாஷ் பண்ணி அரட்டையடித்துக் கொண்டிருக்கிறார்கள். இருவரின் முன்னாலும் வெற்றிலைப் பெட்டி!

அப்போதுதான் 'சில்க் சில்க்'கென்று சிலுக்காட்டம் போட்டுக் கொண்டு கழுத்து மணி குலுங்களுடன் ஒய்யாரமாய் வந்து நிற்கிறது பூரணி மாடுகளுடன் பொட்டு வண்டி ஒன்று. இன்னமும் பல்படாத கன்றுகளோ என்னவோ தறிகொடுக்காமல் வம்பு பண்ணுகிறது. ''ஹோய் ஹோய்'' என்று தன் பூராபலத்தையும் செலுத்தி, தலைக் கயிற்றை இழுத்துப் பிடித்து, மாடுகளை நிறுத்துகிறான் ராஜாங்கம். வண்டிக்குள் அவன் அப்பா நடராஜ கொட்டையுண்டார் கதர் சகிதமாகவும் வெற்றிலைக் குதப்ப லூடனும் பதுவிசாக உட்கார்ந்திருக்கிறார்.

வாக இடங்காப்பிறந்தார் அரட்டையை விட்டு விட்டு ராஜாங்கத்தைப் பார்க்கிறார். அப்போது பார்த்துக் கோயில் புறாக்கள் நான்கைந்து வந்து, எவ்வித அச்சமும் இல்லாமல் 'ட்ரு... ட்ரு... ட்ரு'வென்று கவிதை பண்ணுகிறது.

நடராஜ கொட்டையுண்டாருக்கு இப்போதுதான் கிட்டத்தில் முட்டத்தில் வந்த காசு. காசு வந்தால்தான் களையும் வந்து விடுமே மனுஷர்களுக்கு. ராஜாங்கம் முகத்தில் ஏகப்பட்ட களை. தும்பைப் பூவாய் வாயல் வேஷ்டியும் டெர்லின் சட்டையும் மினுங்கும் செயின் மோதிரங்களுடன் வெகு ஷோக்காய் இருக்கிறான் அவன். அவன் அப்பாவுக்குத்தான் என்ன குறைச்சல். இப்போதுதான் சின்னப்பிள்ளை விளையாட்டே விளையாட ஆரம்பித்திருக்கிறார் மனுஷன். காசு வந்தால் வயசு தெரிகிறதா, வாழ்ந்த வாழ்க்கை தெரிகிறதா? என்னவோ அவரது பெரிய மகன் கப்பலுக்குப் போய் எடுபிடி வேலை பார்த்துப் பணம் அனுப்புகிறானாம் பணம்! செண்ட் மணம் ஆளைத் தூக்குகிறது. அப்பன் போட்டிருக்கிறானா மகன் போட்டிருக்கிறானாவென்று கிட்டே போனாலல்லவா தெரியும் சங்கதி?

வாக இடங்காப்பிறந்தார் சட்டென்று உதட்டில் இரு விரல் கொடுத்து வெற்றிலைச் சாறைச் சிதறி விடாதபடி வாய்க்காய்த் துப்பி விட்டுக் கேட்கிறார். ''என்னடா ராஜாங்கம் சில்க்காட்டமா... அப்பனும் மொவனும் எங்க கௌம்பிட்டீங்க பொட்டு வண்டி கட்டிக்கிட்டு?'' உள்ளுக்குள் சற்றே பொறாமை குடிகொண்டிருந்தாலும் வெளியில் காட்டிக் கொள்ள முடியுமா? தவிப்புதான் லேசாய். ஆனாலும் ராஜாங்கத்தின் உற்சாகத்தைப் பார்த்து அவருக்கும் கொஞ்சம் கூடுதலாய் உற்சாகம் வரத்தான் வருகிறது.

''கும்மாணம் வரைக்கும் மாமா.''

''ஏண்டா...?''

''மாமம் பொண்ணு கஸ்தூரி வயசுக்கு வந்துட்டாளே தெரியாதா?''

''அப்படி போர்ரா சக்கைன்னானாம்... எப்படா ராஜாங்கம்?''

''இன்னியோட பத்து நாளாவுது மாமா.''

''அப்டியா சங்கதி...? போனதுக்கும் மொத மாமாங்கத்தப்ப இம்புட்டோண்டு கெடந்தா. இடுப்புத் துணி அவுர்றது கூட தெர்யாம இந்த கோயிலண்ட சில்லுக்கோடு வெளையாண்டுக்கிட்டு கெடந்தா... வயசுக்கு வந்துட்டாளா, போர்ரா... மாமனுக்கும் மச்சானுக்கும் செலவு வச்சிப்புட்டாளா?''

''செலவென்ன மாமா பெரிய செலவு... பண்ண வேண்டிய செலவைப் பண்ணித்தான தீரணும்.''

''ஒனக்கென்னடா கவலையத்த ராஜா... காசுக்குப் பஞ்சமா ஒன்னா? என்னமாறி ஆளுகளச் சொல்லனும். செரி, சாமாஞ் செட்டு வாங்கப் போறியாக்கும் அப்பனைக் கூட்டிக்கிட்டு.''

''ஆமாம் மாமா, பதினாறாம் நாளு தலைக்கி ஊத்தி, சடங்கையும் கத்திப்புடனுமாம். மாமன் சொல்லிவுட்ருக்காரு.''

''ஏண்டா ராஜாங்கம், கஸ்தூரியை நீதான கட்டிக்கப் போற?''

அவன் சிரிக்கிறான். அவன் அப்பாதான் சொல்கிறார் : ''பின்ன ஆராம்?''

கஸ்தூரியை நினைத்து நினைத்து எத்தனை காலமாய் ஏங்கிக் கிடக்கிறான் அவன். அந்த கஸ்தூரி மட்டுமென்ன, சின்ன வயசிலிருந்தே அவனைத்தானே நினைத்து மறுகுகிறாள். மச்சானை கட்டிக் கொள்ள கசக்கவா செய்யும் அவளுக்கு!

அழகையும் அக்காள் மகளையும் எவனுக்கு விட மனசு வரும்?

இதோ வயசுக்கு வந்து விட்டாள்! ரெண்டு வருஷம் வைத்திருந்து கும்பகோணத்திலேயே பெரிய சத்திரம் ஒன்று பிடித்து ஜாம்ஜாம் என்று கல்யாணம் பண்ணிக் கொள்ளலாம்.

அந்தக் குஷியால்தானே அவளுக்காகப் பட்டும் இன்ன பிற வம்சை வரிசைச் சாமான்களும் வாங்கக் கிளம்பியிருக்கிறான்.

ராஜாங்கம் வண்டியை ஓட்டிக் கொண்டு போய் விட்டான்.

வாக இடங்காப்பிறந்தாரின் அடி நினைப்பில் ஒரு எண்ணம். மூன்று பெண்ணையும் ரெண்டு ஆணையும் பெற்று, வாழ்க்கையில் ரொம்பத்தான் கஷ்டப் பட்டுப் போய் விட்டார். ரெண்டு பெண்களை போட்டடித்து எப்படியோ கரை சேர்த்து விட்டார். ஒரு பையனுக்கும் கல்யாணம் நடந்து முடிந்து போய் விட்டது. கட்டிக் கொடுத்த ரெண்டு பெண்களும் இன்னமும் கட்டின மஞ்சள் கயிற்றோடுதான் இருக்கிறது. போட்டு அனுப்பிய நகைபகைகளையும் பாத்திர பண்டங்களையும் கட்டினவன்கள் விற்றுத் தின்று விட்டார்களாம். கண்ணைக் கசக்கிக் கொண்டு வரும் பெண்களைப் பார்க்க அவருக்குச் சோகம் பொங்கும்.

கடைசி பெண்களையாவது வசதிபசதியான இடத்தில் கொடுக்க ஆசை. இந்த ராஜாங்கம் பயலுக்கே கூட கொடுத்து விடலாம்தான். நெஞ்சில் மாளாத ஆசை










யாய் ஒடிக் கிடக்கிறது அது. கண்ணைக் கசக்காமல் கொள்ளாமல் நல்லபடியாய் வைத்துக் கொள்வான். அவர் கடைசிப் பெண்ணும் வயசுக்கு வந்து ஆறு வருஷத்துக்கு மேலாகியும் கூட இன்னமும் கரையேறாமல்தான் கிடக்கிறது. என்னமோ அவளுக்கு மூலநட்சத்திரமாம். ஆரூரு ஜோசியன் சொல்லி வைத்தான். அவள் ஜாதகப்படி போற இடத்தில் ஆயி அப்பனைக் கொன்று போட்டு விடுவாளாம். வந்த ஐந்தாறு சம்பந்தமும் எட்டி ஒதுங்கிப் போய் விட்டது. ராஜாங்கம் நட்சத்திரமும் மூலமாக இருந்து விடும் பட்சத்தில் வகையாய் முடித்து விடலாம். அட இல்லாது போனால்தான் என்ன? சனியன் அப்பன் ஆயி செத்தால் பூமிக்கு பாரம் குறைகிறது. அறுபதுக்கு மேலும் புடுங்கல் படுகிற உலகத்தில் என்னத்துக்கு வாழ்க்கை வீணாய்? பூமிக்கு ஒன்றும் பாரமா இல்லைதான்; ஒரு பாரம் குறைய ஒன்பது பாரம் ஏறிக் கொள்கிறது. ராஜாங்கத்துக்கோ அவன் அப்பன் நடராஜ கொட்டையுண்டானுக்கோ தன் பெண்ணுக்கு மூல நட்சத்திரம் என்பது தெரியாமலா கிடக்கிறது... என்னமோ அக்காள் மகளைக் கட்டிக் கொள்ள ஒத்தைக் காலில் நிற்கிறான். பட்டு எடுக்கிறானே பட்டு அந்தக் காலத்தில் பொண்ணு புள்ளைகள் வயசுக்கு வந்தால் ஒரு மொழ நூல் சேலை வாங்கிப் போர்த்தி விட்டு வருகிறது மாமன்காரனோட சம்பிரதாயம்... இப்பத்தான் காலம் மாற மாற எல்லாம் மாறிப் போய் விட்டது. புட்டாமாவிலிருந்து பொட்டும் கண்ணாடி சீப்பும் வளையல்களும்... அவள் குளிக்கணுமாம்! முக்காலி, குவளை, சொம்பு என்று வகை வகையாய் வாங்கிக் கொடுக்கிறான்கள், புதுக்காக படைச்சவன்கள். ஐதிகம் தான்! மரபு தான்! உலகம் கெட்டு விட்டது... ரொம்பத்தான் கெட்டு விட்டது.

இப்போது முத்தையா இடங்காப்பிறந்தாருடன் அரட்டையடிக்கத் தோன்றவில்லை அவருக்கு. பெருமூச்சாய் ஏக்கம் உடைபடுகிறது. ஒரு நல்லது பொல்லாததுகளுக்கு யோசனை வாசனை கேட்க வரும் ராஜாங்கமோ அவன் அப்பனோ வந்தால் அப்போது பார்த்துக் கொள்ளலாம் என்று கம்முனு குந்தியிருக்கிறார். எதற்கும் அவரைத்தானே அந்த ஊரில் பெரிய மனுஷனாய் நினைத்து - யோசனைகள் கேட்கப் போவார்கள் ராஜாங்கம் குடும்பத்தாரும். ''நேர மாச்சி.. சாப்ட்டு வந்துரலாம் வாங்க'' சொல்லிக் கொண்டே முத்தையா இடங்காப்பிறந்தாரை அழைத்துப் போகிறார்வாக இடங்காப்பிறந்தார்.

கஸ்தூரியின் சடங்கு கற்றல் வைபவம் அமர்க்களப்படுகிறது. மேளக் கச்சேரி கிடுகிடுக்கிறது. ராஜாங்கம் முன்னாடி ஆளாய்ப் போய் விட்டான். எப்படியும் கஸ்தூரியைப் பார்த்து விட வேண்டுமென்ற ஆசையான ஆசை.

கஸ்தூரி புதுப்பட்டு உடுத்தி கீற்று மறப்பு ஓட்டையிலிருந்து ராஜாங்கத்தை ஆசை ஆசையாய் பார்க்கிறாள். ''நோதுக்கு வந்து விட்டேன் மச்சானே ரெண்டு வருஷப் பொழுது ஓடுகிறது தெரியாமல் பொண்ணு கேட்க வந்திடுங்கள் மச்சானே'' என்று சொல்லாமல் சொல்லும் அவள் கவிதைக் கண்கள். மேகத் திரள்களில் மறைந்து கொண்ட நிலவு மாதிரி என்ன பொல்லாங்கு இது. அவனும்தான் முழித்து முழித்துப் பார்க்கிறான். அவள் முழு முகமும் தெரியாதா தெரியாதாவென்று. கண்கள் தெரிந்த மாதிரி காட்சி தெரியவில்லையே!

சடங்கு சம்பிரதாயத்தை முடித்து விட்டு வீட்டுக்கு வந்தான் ராஜாங்கம். ரெண்டு வருஷத்தை ரெண்டு நிமிஷம் மாதிரி அவள் நினைப்பிலேயே ஓட்டிக் கழித்தான். இதற்குள் கடல் கடந்து சம்பாரிக்கப் போன அண்ணன்காரனும் அநேக திரவியங்களோடு வீட்டுக்கு வந்து விட்டான். எல்லாம் தம்பியின் கண்ணாலத்தை உத்தேசித்துத்தான்.

முறைப்படி பெண் பார்த்தார்கள். மாப்பிள்ளை பார்த்தார்கள். ஜாதிகுலம்தான் விசாரிக்கத் தேவையிருக்கவில்லையே. கஸ்தூரியின் அப்பா, ''ஜாதகம் சரியாயிருந்தா முடிச்சுக்கங்க'' என்று நல்லதனமாய் வேறு சொல்லி விட்டார்.

வகைபகையான ஜோசியரைச் சந்தித்து ஜாதகம் பார்க்க வாக இடங்காப் பிறந்தாரை நாடி வந்தார்கள் ராஜாங்கமும் அவனது அப்பாவும். சரியென்று சொல்லி உடனேயே கிளம்பி விட்டார் அவரும். தாமசப்படுத்த என்ன இருக்கிறது இதில்? ஒரு நல்ல காரியத்தைச் செய்ய நாலு பேர் இருந்தால்தானே நடக்கிறது. வில் வண்டி கட்டிக் கொண்டு ஆலூரு ஜோசியனை நாடிப் போனார்கள் எல்லாரும்.

ஆலூரு ஜோசியன் பொல்லாத குறும்பனோ என்ன எழவோ! 'பொண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் பொருத்தம் பத்தா தய்யா. அஷ்டமத்தில் சனி. அது மட்டும் தானா? பத்துப் பொருத்தத்தில் ரெண்டு பொருத்தம் கூட சரியாய் அமையவில்லை. பொண்ணைக் கட்டின வருஷமே அறுத்துப் போய் விடுவாள், அப்பன் வூட்டுக்கு' என்று எடக்குமொடக்காய் துணிச்சலாகவே சொல்லி வைத்தான். இல்லை குண்டு போட்டான்! மனங்களை நொறுக்க ஜாதகத்தாலும் ஜோசியனாலும் மட்டும் தானே வாய்க்கிறது. நொறுங்கிப் போனான் ராஜாங்கம். 'கஸ்தூரி எனக்கில்லையா?' குமுற ஆரம்பித்தது மனசு.

வில் வண்டியில் திரும்ப வீட்டுக்கு வருகிற வழியெல்லாம் அழுகை அழுகைதான் ராஜாங்கத்துக்கு. எதுவும் யாரிடத்திலும் அவன் பேச்சே வைத்துக் கொள்ளவில்லை. வாக இடங்காப் பிறந்தாருக்கு காரியம் கெடுதலாய் முடிந்து போனதில் வெளியில் காட்டிக் கொள்ள முடியாத பரம சந்தோஷம். அப்போதே அவர் கணக்குப் போட்டு விட்டார். 'எப்படியும் தன் பெண்ணை இவன் தலையில் கட்டி விட வேண்டுமென்று. அதை இப்போது பார்த்து கூச்சநாச்சமில்லாமல் சொல்லவும் ஆரம்பித்து விட்டார். ''மாப்ளே... மனசுல வச்சுக்காம கெட்டியமா இருங்க... கஸ்தூரி இல்லாட்டி என்னா ஏம் பொண்ணு கௌசலை இருக்காளே... பொண்ணு தர்றேன் தைரியப்படுங்க.. ஒலகத்துல எல்லாப் பொண்ணும் பொண்ணு தான்'' என்று அவனை மரியாதை கொடுத்துப் பேசியது கூட அவன் மீது அபிமானப் பட்டுத்தான்.

அவன் எதையும் காதில் வாங்கிக் கொள்கிற நிலையில் அப்போது இல்லை. வண்டி நாலுகா பாய்ச்சலில் கரடுமுரடான சாலையைத் தாண்டித் தாண்டி ஓடிக் கொண்டிருந்தது.



## கண்ணதாசனை மாற்றிய வாரியார்!

''பன்னிரண்டு வருஷங்களுக்கு முன் கிருபானந்த வாரியாரின் தொடர்பு எனக்கு ஏற்பட்டது. திடீரென்று அவர் எனக்கு ஒரு நாள் டெலிபோன் செய்து, ஒரு திருக்குளத் திருப்பணிக்காக என்னைப் பார்க்க வருவதாகச் சொன்னார்.

நான் உடனே, ''சுவாமி, நீங்கள் வரவேண்டாம். நானே வருகிறேன்' என்று கூறி, ஒரு நண்பரிடம் ஐயாயிரம் ரூபாய் கடன் வாங்கிக் கொண்டு, நேரே சிந்தாதிரிப் பேட்டையிலுள்ள அவரது இல்லத்திற்குச் சென்றேன்.

அவர் காலைத் தொட்டு வணங்கி அந்தப் பணத்தைக் கொடுத்தேன். பிறகு அவர் சொற்பொழிவுகளைக் கேட்க ஆரம்பித்தேன். அதிலிருந்து என் போக்கே மாறிவிட்டது.

1949-இல் நாத்திக நண்பர்களின் சகவாசத்தால் நாத்திகனானவன், வாரியார் சுவாமிகளின் சகவாசத்தால், 'அர்த்தமுள்ள இந்துமதம்' எழுதத் தொடங்கினேன்.''

- கண்ணதாசன்

ஆதாரம் : 'அர்த்தமுள்ள இந்துமதம்' பாகம் - 4

தகவல் : எஸ். விஜயலக்ஷ்மி

# இது இல்லாமலே இந்த வாசனை!



"என்ன வாங்கிட்டு வந்திருக்கீங்க? கமகமன்னு ஒரே வாசனையாயிருக்கே!''

''...சுகந்தப் பாக்குதான் வாங்கிட்டு வந்திருக்கேன்.''

''எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்குங்க!''

''என்னைத்தானே?'

''ஊஹூம்... சுகந்தப் பாக்கை!''

தினந்தோறும் காலை நேரத்தில் இந்த விளம்பரத்தை ரேடியோவில் கேட்டுப் பழகியிருக்கிறோம். இன்று வாசனை புகாத பொருளில்லை. புகையிலை, சிகரெட், சோப்பு, தைலம், பவுடர், கிரீம், பேஸ்ட், கூல்டிரிங்க்ஸ், பேக்கரி தயாரிப்புகள், ஊது வத்தி, இத்யாதி... இத்யாதி. இன்னும் சொல்லப் போனால் ஒரிஜினல் சுவையே மறந்து போய் விடும் அளவுக்கு 'சர்வம் வாசனைமயம் ஜகத்' என்று எங்கும் நீக்கமற நிறைந்திருக்கிறது! எங்கிருந்து வந்தது இந்த வாசனை?

# விவசாயத்தில் ஒரு சூப்பர் ஸ்டார்!

சொன்னால் ஆச்சரியப்படுவீர்கள்! ரோஜா மணம் கமழும் வாசனை, ரோஜாப் பூவிலிருந்து அல்ல! ஒரு புல்தான் இதற்குக் காரணம்! அதுதான் பாமரோசா எனப்படும் புல். இந்தப் புல்லின் இலை, தண்டுப் பகுதி, பூ இவற்றிலெல்லாம் ரோஜா மணம் கமழும் எண்ணெய் உள்ளது.

இந்தப் புல் எங்கும் வளரும் தன்மையுடையது. குறைந்த அளவு மழை கிடைத்தாலும் போதுமானது. எல்லா வகை நிலங்களிலும், மானாவாரி அல்லது இறவைப் பாசன முறைகளிலும் வளர்க்கலாம். ஒருமுறை விதைத்து, பல வருடங்கள் தொடர்ந்து அறுவடை மட்டும் செய்து பயிர் வளர்க்கலாம். இதனைப் பராமரிப்பதும் சுலபம். அதிக உரம், களை எடுப்பு, பூச்சிக் கட்டுப்பாடு என்று எந்தப் பிரச்னைகளும் இல்லை. களர், உவர் நிலங்களிலும் உப்பு நீரிலும் கூடப் பயிர் செய்ய ஏற்றது. எண்ணெய்ப் பசை இருப்பதால் ஆடு மாடுகள் மேயாது. இவ்வளவு அனுகூலங்கள் கொண்ட இந்தப் புல்லை ஆண்டு முழுவதும் பயிர் செய்து, குறைந்த முதலீட்டில், ஏக்கருக்கு ஓர் ஆண்டில் ரூ 6000 முதல் 20,000 வரை நிகர லாபம் பெறலாம்!

இந்தப் புல்லிலிருந்து எண்ணெய் வடிப்பதும் சுலபம். நீராவி கொண்டு பிரித்தெடுத்து, குளிர்வித்தால் எண்ணெய் கிடைக்கும். ஒரு டன் புல்லிலிருந்து நாலு கிலோ வாசனை எண்ணெய் கிடைக்கும். ஒரு கிலோ எண்ணெய் இன்று ரூ 400 - 450 வரை விற்கப்படுகிறது!

இந்த எண்ணெயை இன்னும் தூய்மைப்படுத்தி, வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யலாம். அதற்குக் கிடைப்பது சூப்பர் ரேட்! ஒரு கிலோவுக்கு ரூ 1000க்கும் அதிகமாக!

எண்ணெய் எடுத்த பின்பு மீதமாகும் கழிவுப் புல்லைத் தற்போது நீராவி தயாரிக்க எரிபொருளாகப் பயன்படுத்துகிறார்கள். இதனை (எண்ணெய்ப் பசை இல்லாத நிலையில்) மாட்டுத் தீவனமாகப் பயன்படுத்திப் பால்வளம் பெருகக் காணலாம். உணவுக் காளான் தயாரிப்பிலும் காகிதம், அட்டை போன்றவற்றின் தயாரிப்புக்களிலும் இதனை உபயோகிக்கலாம்.

பாமரோசா புல் இன்றைய வேளாண்மைத் தொழிலில் சூப்பர் ஸ்டார் எனக் கொடி கட்டிப் பறக்கிறது.

ஒரே ஒரு கவலைதான். 'சுலபமான பயிர்; லாபம் எக்கச்சக்கம்' என்பதால் எல்லா விவசாயிகளும் இதில் இறங்கி விட்டால் இதன் விலை சரியும்; உணவு உற்பத்தி குறையும், உணவுப் பண்டங்களின் விலை கூடும். எனவே எச்சரிக்கை தேவை.

– ஸி. ஆர். லக்ஷ்மிநரசிம்மன்

# 18

இப்படிப் பண உதவி கேட்டுப் போகும் இடத்தில் அவமானப் படும் படியான சொற்கள் வீசப்படுவது வெகு சாதாரணமான ஒரு விஷயம். அதற்காக உணர்ச்சிவசப்பட்டு சுதோ அறையும் அளவுக்குப் போய்விடுவாள் என்று கஸ்தூரி ரங்கன் எதிர்பார்க்கவில்லை.

அந்த அலுவலகத்திலிருந்து அதற்கு மேல் ரசாபாசம் எதுவுமின்றி வெளிப்பட வேண்டும் என்று தோன்றியது. அதே சமயம் சுதோவைப் பற்றி மட்டமாகப் பேசியவனையும் அடித்து நொறுக்க வேண்டும் போல் இருந்தது.

நல்ல வேளையாக, சுதோவைப் பற்றி அப்படி மட்டரகமாகப் பேசியதற்காக அந்த ஆளை பக்கத்து, எதிரெதிர் நாற்காலிகளில் இருந்தவர்களே ரசிக்காமல் எதிர்த்தார்கள். அப்படி அவர்கள் எதிர்த்ததற்குக் கூட சுதோவின் அழகு ஒரு காரணமோ என்னவோ. அவர்கள் ஆட்களே சுதோவிற்கும், கஸ்தூரி ரங்கனுக்கும் பரிந்து கொண்டு வந்ததால், அவனால் அங்கிருந்து சுலபமாக வியூகத்தை உடைத்துக் கொண்டு வெளியேற முடிந்தது.

''எப்படி ரங்கா நீங்க அவனைச் சும்மா விடலாம். என்ன சொன்னான் கேட்டீங்களா?''

''என்ன சொன்னான்?''

''என்னை நீங்க தள்ளிட்டு வந்திருக்கீங்கன்னு சொன்னான்.''

''அதுல கோபப்பட என்ன இருக்கு? மக்கர் பண்ற காரைத் தள்ளி விடறதில்லையா?''

''தள்ளிட்டு வரதுன்னா அதா அர்த்தம்?''

''பின்ன?''

''இல்லீகலா என்னைக் கூட்டிட்டு வந்திருக்கீங்கன்னு சொல்றான். ஒடம்பு வியாபாரம் பண்றவன்னு சொல்றான். அவனை விட்ருக்கக் கூடாது.''

''என்ன பண்ணியிருக்கணும்?''

''இன்னும் நாலு அடி அடிச்சிருக்கணும் ரத்தம் வர்ற மாதிரி.''

''அப்படி எத்தினி பேரை அடிக்கறது சுதோ?''

சுதோ குடித்துக் கொண்டிருந்த க்ரேப் ஜூஸை வெறித்தாள். மௌனமானாள். அவர்கள் இருவரும் உட்கார்ந்திருந்த அந்த ஃபாஸ்ட் ஃபுட் ஹோட்டலில் சுற்றியிருந்த அத்தனை பேரும் தங்கள் இருவரையே பார்த்துக் கொண்டிருந்த மாதிரி உணர்ந்தாள்.

''நீங்க என்ன சொல்றீங்க ரங்கா?''

''ஒண்ணும் சொல்லலை. நாம பல்லக்குத் தூக்கறவங்களா இருந்தா, பல்லக்கு மேல உக்காந்திருக்கறவன் நம்மளைத் திட்டத்தான் செய்வான்.''

''நாமளும் பல்லக்கில உக்காரணும்னா?''

''நீ என் கூட வந்திருக்கக் கூடாது.''

''இது என்ன பேச்சு? நான் உங்ககூட வராம வேற யார் கூட... அப்புறம் அவன் சொன்னது சரியாப் போயிடாதா? ரங்கா, நாம ஒடனே கல்யாணம் பண்ணிக்கணும். வாங்க கடை எங்க இருக்குன்னு பாருங்க. ஒரு மஞ்சக்கயிறு வாங்குங்க. இப்பவே என் கழுத்துல கட்டுங்க. கந்தசாமி கோயில் கிட்ட நெறைய மஞ்சக்கயிறு கெடைக்கும். வாங்க போலாம்.''

சுதோ பேச்சை இந்த திசைக்கு நடத்திச் செல்வாள் என்று எதிர்பார்க்காத கஸ்தூரி ரங்கன் திகைத்துப் போனான். வேதாளம் திடீரென்று உடலை அவன் தோளிலேயே போட்டு விட்ட மாதிரி இருந்தது.

''அப்படின்னா தள்ளிட்டுப் போறவ கழுத்தில் கூட ஒரு மஞ்சக்கயிறை வெலைக்கு வாங்கிக் கட்டிடலாமே சுதோ?''

''எனக்கு இந்த விதண்டாவாதமெல்லாம் வேணாம். நீங்க தாலி கட்டிட்டீங்கன்னா அப்புறம் எவன் எது சொன்னாலும் நான் கவலைப்பட மாட்டேன். நீங்களும் இப்படி தயிர் சாதம் மாதிரி இருக்க மாட்டீங்க. தானாடாட்டாலும் சதை ஆடிடும். சொல்லுங்க. என்னைப் புடிச்சிருக்கா இல்லியா?''





''ஐயோ. புடிச்சிருக்கு. புடிச்சிருக்கு. புடிச்சிருக்கு.''

''பின்ன தாலிகட்டச் சொன்னா, ஏன் நெருப்பு மிதிக்கச் சொல்லிட்ட மாதிரி என்னைப் பாக்கறீங்க. தாலிங்கறது உங்களுக்கு நான் குடுக்கற அதிகப்படியான சலுகை இல்லையா? உரிமை இல்லியா? என்னை ஒடனே கல்யாணம் பண்ணிக்குங்க ரங்கா. ஒடனே தாலி கட்டிடுங்க. என்னால இந்த அவமானத்தைத் தாங்க முடியலே. எனக்கு ஒடம்பெல்லாம் எரியுது. கூசுது. உங்களால தான் அதைச் சரி பண்ண முடியும்!''

''கவிதா, ப்ளீஸ் நெறைய உணர்ச்சி வசப்படறே.''

''படுவேன்.''

''அதுக்காக? திருடங்க மாதிரி நடந்துக்கணுமா? தாலிங்கறது அவ்வளவு சாதாரணமான விஷயமா? ஷூட்டிங்கா கவிதா, கட்டிட்டுக் கழட்றதுக்கு? சபரில இருக்கறவங்க அத்தனை பேரும் சாட்சியா வர வேணாமா? உங்கப்பா வேணாமா? உங்க உறவுக்காரங்க வேணாமா? இப்படி திடுதிப்புன்னு தாலியைக் கட்டிக்கிட்டா நாளைக்கு ஒன் லைடு ஆளுங்க எல்லாம் என்ன பேசுவாங்கன்னு நெனைக்கறே? 'கல்யாணத்துக்கு முன்னாலயே அவசரப்பட்டுட்டா போல இருக்கு. அதான் நடிகை மாதிரி ரகசியமாப் பண்ணிட்டு வந்து நிக்கறா. பாருங்க. எழாவது மாசமே இவ பிள்ளை பெத்துக்கப் போறா'ன்னு சொன்னா அப்ப நீ என்ன பண்ணுவே. நான் அப்ப என்ன செய்யணும்னு சொல்லுவே.''

''ரைட். நான் அப்பா கிட்ட பர்மிஷன் வாங்கறேன். ஊரறிய மேளம் கொட்டி, பிப்பீ ஊதிக் கல்யாணம் பண்ணிக்கலாம். சரியா?''

''ம்.''

''என்ன

அபா

விளக்கெண்ணெயா குடிக்கப் போறீங்க. சந்தோஷமா கையக்குலுக்கி 'கங்கிராட்ஸ்' சொல்லுவீங்கன்னு பாத்தா 'ம்' மாமே. உர்ராங் உடான். சிம்பன்ஸி. சோலிங்கர் ஸ்பெஷல்.''

''ஏய்.''

''ஏய்....ய்....ய்... வெவ்வெவ்வே. நான் இப்பவே வீட்டுக்குப் போறேன். அப்பா எங்க இருக்கார்னு தெரிஞ்சிக் கிட்டுப் பேசி, பர்மிஷன் வாங்கிட்டு ஒடனே ஒங்களுக்குப் ஃபோன் பண்றேன். என்ன?''

''சரி.''

''பெஸ்ட் ஆஃபி லக் கெடையாதா?''

''பெஸ்ட் ஆஃப் லக்.''

''ஃப்ளையிங் கிஸ் கெடையாதா?''

கஸ்தூரி ரங்கன் சுற்றுமுற்றும் பார்த்து உதடு குவித்து, நான்கு விரல்களில் உதட்டி லிருந்து அழுந்த முத்தம் எடுத்துக் காற்றில் பறக்க விட்டான்.

''டாடி....''

''எனக்குத் தெரியும்.''

''என்ன தெரியும்?''

''அஞ்சு வயசிலே ஒரு பொண்ணுக்குப் பென்சில் வேணும். கலர்கலரா ரப்பர் வேணும். பத்து வயசில விதவிதமா ட்ரெஸ் வேணும். பதினஞ்சி வயசில பாய்ஸ் இடிக் காம போய் வர சைக்கிள் இல்லன்னா மொபட் வேணும். ஒனக்கு இருவத்தோரு வயசாகுது. டிகிரி முடிச்சிட்டே. இப்ப ஒனக்கு மாப்பிள்ளை வேணும். யாரு? கஸ்தூரி ரங்கன்தானே? கண்ணைப் பெரு சாக்காதே. தங்கம் கிட்டக்கச் சொன்னி யாமே, எங்கிட்ட சொல்லச் சொல்லி. சொன்னா. அந்தப் பையனைப் பத்தி விசாரிச்சேன். நல்ல பையன். ஒவக்குக் கூஜா தூக்குவான்னுதான் தோணுது. அவனோட அப்பா மிலிட்டரியில இருந்திருக்காரு. சண்டைல நாட்டுக்காக உயிரை விட்ருக் காரு. பையனோட ஒடம்புலயும் அந்த மாதிரி ரத்தந்தான் ஓடும். நேர்மையா இருப் பான்னு நம்பறேன். பர்மிஷன் கிராண்ட்டட்.''

''ஐயோ.... டாடி.... டாடி....''

''என்னம்மா. பாத்து. ரொம்ப குதிக் காதே. நீ குதிக்கற குதியில கிரானைட் ஸ்டோனே பேத்துக்கும் போல இருக்கு.''

''இல்லப்பா. லவ் பண்றேன்னு சொன் னாலே எல்லா அப்பாக்களும் பொண்ணை விரோதியாகத்தானே பார்ப்பாங்க.''

''யெஸ். ஏன்னா, பொண்ணு ஏதாவது ஒரு முட்டாப்பயலையோ, ஃப்ராடையோ செலக்ட் பண்ணி இருந்தா என்ன பண்ற துன்னு பயம். பொண்ணை நல்ல பைய னாப் பாத்துக் கட்டிக் குடுக்கணும்னுதானே எல்லா அப்பாக்களும் ஆசைப்படுவாங்க. பொண்ணுக்கு என்ன இருந்தாலும் தகப் பனை விட புத்தி கம்மின்னு அப்பாக் களுக்கு எல்லாம் ஒரு தீர்மானமான முடிவு இருக்கும். அஃப்கோர்ஸ் ஒனக்கும் புத்தி மட்டுதான்.''

''போங்கப்பா.''

''ஆனா பையனை செலக்ட் பண்றதில இல்லே. அவசரப்பட்டு தாலி கீலி கட்டிக்கப் போறே. நான் ஃபோன் பண்ணி யிருக்கேன். நல்ல நாள் கேட்டுச் சொல் றேன். ஃபார்மலா ஒரு நிச்சயதார்த்தம் வெச் சிக்கலாம். அன்னிக்கு கல்யாணத்துக்கு டேட் வக்கலாம். எனக்கும் கல்யாண வேலையைக் கவனிக்க நேரம் கிடைக்கும். டேட் ஃபிக்ஸ் பண்ணிட்டா ஆட்டோ மேடிக்கா ஒரு வேகம் கெடைக்கும். தங்கம்....''

தங்கம் ஒரு ட்ரேயில் கவிதாவிற்கும், அப்பாவிற்கும், தனக்குமாக கவிதாவிற்குப் பிடித்த பாஸந்தியை ஆறு கோப்பைகளில் ஊற்றிக் கொண்டு வந்தாள்.

''ஸ்வீட் சாப்பிடு கவி. சந்தோஷமா இப்ப?''

''ஒலகம் நெறைய'' என்றாள் கவிதா, அப்பாவைக் கட்டிப் பிடித்து.

''ஹலோ.... சபரி?''

''யெஸ்.. ரங்கா.''

''ரங்கா... ரங்கா....''

''சொல்லு கவிதா! என்ன ஆச்சி கவிதா?''

''அப்பா சம்மதிச்சிடுவார்னுதான் நெனைச்சேன்.''

''என்ன ஆச்சி கவிதா?''

''ரங்கா. நீங்க வாங்களேன்.''

''எங்க கவிதா?''

''கபாலி கோயிலுக்கு. முருகர் சன்னி திக்குப் பக்கத்துல ஒரு மண்டபம் இருக்கே. அங்க வர்றீங்களா....''

''ம். எப்ப?''

''இப்பவே. நாலு மணியாகுது. இன் னும் அரை மணி நேரத்தில்....''

''அஞ்சி மணிக்கு வந்துடறேனே...''

''ம். ஐயோ.. அப்பா. ரங்கா, நான் நேர்ல பேசிக்கறேன்.''

''கவிதா. வீட்ல ஏதாவது ப்ராப்ளமா? சொல்லும்மா.''

''மரத்தடியில் உட்கார்ந்துட்டு சீட்டு விளையாடறீங்களா? வாங்க ஸ்டேஷ னுக்கு.''
''பரவாயில்லைங்க, இங்கேயே காத்தோட்டமா இருக்குங்க!''
- எம். அசோக்ராஜா.



கதோ ரிசீவரை வைத்துவிட்டு வீர பாண்டிய கட்டபொம்மன் சிவாஜி மாதிரி ஒரு சிரிப்பு சிரித்து விட்டு, வார்ட் ரோபைத் திறந்து வண்ண வண்ணமாக இருந்த எல்லா ஆடைகளையும் சரியவிட்டாள்.

கபாலி கோவில். முருகர் சன்னிதி. பக்கத்து மண்டபம்.

கதோவின் அலங்காரம் ஒரு மணி நேரமாக வீணாகிக் கொண்டிருந்தது. பெண்டாட்டி பிள்ளைகளுடன் சென்ற நடுத்தர வயது ஆண்கள் எல்லாம் கூட ஒரு மாதிரி திருட்டுத்தனமாகத் திரும்பிப் பார்த்து, ரசித்து, பெருமூச்சு விட்டு தங்களின் விதியை நினைத்துக் கொண்டு நகர்ந்தது முதலில் பார்க்க கதோவிற்குச் சந்தோஷமாக இருந்தது.

இப்போது கோபமாய் இருந்தது. நான் என்ன மிட்டாய்க் கடையா? யானையா? ரயிலா?

மண்டபத்தில் ஒலிபெருக்கி அமைத்து, மைக் அமைத்து, விளக்குகள் பொருத்தி, பட்டுப் புடைவையும், வைரக்கம்மலும், ஹார்மோனியமுமாய் ஒரு பெண்மணி வந்தமர்ந்து, ''குருவாய் உருவாய்' என்று கந்த புராணத்தை நேற்று விட்ட இடத்திலிருந்து தொடங்க, ரிடயர்ட் ஆசாமிகள் ஒரு நாலைந்து பேர் வந்து சப்பணம் கட்டி அமர்ந்தார்கள்.

கதோ வந்து சேர்ந்த போது ஐந்து மணி. ராகுகால பூஜை செய்யும் பொருட்டு, வந்து பூஜை முடித்த அவள் வயதொத்த பெண்கள் எண்ணெய்க்கிண்ணமும், எலுமிச்சை மூடியுமாய்த் தென்பட்டார்கள். ஆறு மணிக்கு மேல் ஆபீஸ் ஆண்கள் தத்தம் மனைவிமார்களுடன் பட்டுப் புடைவை சரசரக்க, வேஷ்டி தடுக்கத் தடுக்க வந்து தாம் பத்யம் சிறக்க வேண்டிக் கொண்டு போனார்கள். ஏழு மணிக்குக் கொஞ்சம் குடும்பஸ்தர்கள். 'வெளில கூட்டிட்டுப் போங்களேன்' தொல்லை தாங்காமல் குழந்தைகளுடன், மனைவிகளுடன், வெறித்த பார்வைகளுடன். எட்டு மணிக்கு மாமியார்கள் சந்திப்பு. மாமனார்கள் சந்திப்பு. பட்டுப் புடைவை வைரக்கம்மலைத் தொட்டு, 'தம பார்வதி பதயே' சொல்லி விட்டு சோகையான 'ஹரஹர மஹாதேவாவை' எதிர் கொண்டு ஹார்மோனியப் பெட்டியை மூடியது.

மன வலிமை ஒன்று மட்டும் நம்மிடத்தில் இருந்து விட்டால், உலகில் உள்ள மற்ற எல்லா வலிமைகளையும் நாம் பெற்றதற்குச் சமம். நம்மிடமுள்ள எல்லாப் பலவீனங்களில் இருந்தும் நாம் விடுபட, எல்லாத்துறைகளிலும் நாம் உயர்வு பெற்றுச் சிறக்க, நமக்கு மன வலிமை ஒன்று போதும். மன வலிமை இல்லாவிட்டால், மற்ற ஆயிரம் வலிமைகள் நம்மிடத்தில் இருந்தாலும் கர்ணன் கற்ற வில் வித்தை போல், தக்க சமயத்தில் அவை நமக்குப் பயன் படாமல் போய் விடலாம்.

கதோவிற்கு மென்மையான மனம். அனிச்சமலருக்கு ஒப்பானது. அதனால் அது வாடிப் போனது. நொறுங்கிப் போனது. அள்ளி அள்ளிக் கொடுக்கக் குறையாத அன்பு இருந்தும், அழகு இருந்தும், ரசனை இருந்தும், பார்ப்பவரை எல்லாம் அவள் பாட்டுக்கு நடனமாடச் செய்யும் திறமை இருந்தும் அந்த நேரத்தில் அவை எதுவும் அவள் உதவிக்கு வரவில்லை. ஃபோன் செய்து கேட்கத் தோன்றவில்லை. கோபம் வந்தது. நான் அழைத்தும் ரங்கா ஏன் வரவில்லை? எவ்வளவு சந்தோஷமான செய்தியை மனத்தில் தாங்கிக் கொண்டிருக்கிறேன். பகிர்ந்து கொள்ள வரவேண்டியவன் ஏன் வரவில்லை?

அவமானம், ஆத்திரம், கோபம் எல்லாம் மாறி மாறித் தாக்க, கதோ கோவிலில் இருந்து வெளிப்பட்டு, அருகில் உரசினாற் போல் சென்ற ஒரு ஆட்டோக்காரன் பயந்து போகும் அளவு 'ஆட்டோ' என்று கத்தி ஏறி அமர்ந்து, ''சபரி'' என்றாள்.

''எங்கம்மா?'' என்றான் டிரைவர் புரியாமல்.

''பெசன்ட் நகர்.'' சபரி என்றால் உலகே அறியுமா என்ன? சபரியாம். பேரைப் பார். பேரை. சபரி போல் உபசரிக்கிறாராம். ஒரு பக்கம் கிழங்கட்டைகள். ஒரு பக்கம் பிஞ்சில் பழுத்தவைகள். இந்த ரங்கா ஒரு மாயக் கூத்தடிக்கிறான்.

"ரங்காவா? ஒன்னைப் பாக்கத்தானே கௌம்பிப் போனான். கபாலி கோவிலுக்கு வரச் சொல்லியிருந்தியாமே?'' என்றாள் விசாலிப்பாட்டி சபரியில், அவளிடம்.

(தொடரும்)

# பந்து விளையாடும் விஞ்ஞானிகள்!



* C60 மூலக வடிவம்

கரியை எரிக்கும் போது கிளம்பும் புகை, சுற்றுப்புறச் சூழலைப் பாதிப்பதாகக் கூப்பாடு போடாதவர் இன்று உலகில் கிடையாது. இன்னும் சில காலம் போனால் இந்தச் சுற்றுச் சூழல் தூய்மைக் காப்பாளர்கள் கரிப் புகையை இவ்வாறு கண்டபடி தூற்ற முடியாது!

காரணம், கரிப் புகையிலிருந்து விஞ்ஞானிகள் அண்மைக் காலத்தில் C60 என்ற பொருளைப் பெற்றுள்ளனர். இந்த C60, ஜீம்பூம்பா மாதிரி அற்புதங்களைச் சாதிக்கவல்லது என்றும் கண்டறிந்துள்ளனர்.

என்ன அற்புதம்?

அண்மையில் கூட மன்மோகன் சிங் ஒரு குரல் அழுதிருக்கிறார், மின்வாரியங்கள் எல்லாம் கோடிக்கணக்கில் நஷ்டமடைவதாக. நமக்கும் தெரியும். இந்த நஷ்டத்துக்குத் திறமையின்மை, அரசியல் நோக்கு என்று பல காரணங்கள் உண்டு எனினும், முக்கியமான காரணம் மின்சாரம் அனுப்பப்படும் போது வழியிலேயே ஏற்படும் இழப்பு. மின்சாரம் இருட்டப்படுவதால் ஏற்படும் இழப்பு தவிர, தாமிரம்; அலுமினியம் போன்ற கம்பிகள் வழியே பாயும் போதே இழப்பு இயற்கையாகவே நாற்பது சதம் வரை ஏற்படும்! இதற்குக் காரணம், கம்பிகள் மின்னோட்டத்துக்கு ஏற்படுத்தும் தடை. இதனை transmission loss என்பர். இதனைக் குறைந்தபட்சமாக்கும் தொழில் நுணுக்கத்தை மேல்நாட்டவர் பெற்றுள்ள அளவில் நாம் இன்னும் பெறவில்லை. மேல்நாடுகளிலும் ஆராய்ச்சி தொடர்கிறது.

சமீபத்திய ஒரு சோதனையின்படி கரிப் புகையிலிருந்து பெறப்பட்ட C60 உடன், பொட்டாசியம் என்ற உலோகம் இணையும் போது, ஒரு ''சூப்பர் கண்டக்டர்'' உருவாகிறது என்று கண்டறிந்துள்ளனர். இந்த ஆராய்ச்சியைத் தொடர்ந்து நடத்தி விஞ்ஞானிகள் வெற்றி கண்டால், சூப்பர் கண்டக்டர்கள் மூலமாக மின்சாரம் அனுப்புதலில் இழப்பே இராது; அல்லது, அலட்சியம் செய்யக் கூடிய அளவில் மிக மிகக் குறைவாக இருக்கும். அந்த அளவுக்கு மின் நிலையங்களின் லாபம் கணிசமாக அதிகரிக்கும்.

இந்தக் கண்டு பிடிப்பு நடைமுறைக்கு வந்த பிறகும், இந்திய மின் வாரியங்கள் நஷ்டத்தில் இயங்கக் கூடிய அபார ஆற்றலைப்



* தயாரிக்கப்படும் மின்சாரம் கம்பிகள் வழியே அனுப்பப்படும் போது இழப்பு 40%!

பெற்றுள்ளன என்பது வேறு விஷயம்!

பொட்டாசியம் தவிர வேறு பல உலோகங்களுடனும் C60 வினைபுரியும் போது கிடைக்கும் பொருள்களை சூப்பர் கண்டக்டர்களாகப் பயன்படுத்தி, எது மிகச் சிறந்தது, எதில் செலவு மிகவும் குறைவு, என்ற ஆய்வுகளை விஞ்ஞானிகள் தற்போது நடத்தி வருகின்றனர்.

C60-ன் முக்கியத்துவத்தை உணர்ந்து, உலகப் புகழ்பெற்ற விஞ்ஞான இதழான "science" அதனை "Molecule of the year - 1991" என்று பாராட்டியுள்ளது.

C60-ன் மூலக வடிவம் ஒரு கால் பந்து போல் அமைந்திருப்பதை விஞ்ஞானிகள் கண்டறிந்துள்ளனர். (படம்) இதில் 12 ஐங் கோணங்களும் 20 அறுங் கோணங்களும் உள்ளன. C60 தவிர C70 என்ற பொருளையும் கண்டுபிடித்துள்ளனர். C70 ன் மூலக வடிவம் ஒரு ரக்பி பந்து வடிவில் உள்ளதாக விஞ்ஞானிகள் கருதுகின்றனர்.

C60 என்ற மூலக் கூறினைப் பெருமளவில் தயாரிப்பதற்கான எளிய முறையை 1990ம் ஆண்டில் ஜெர்மானிய அமெரிக்க விஞ்ஞானிகள் இணைந்து செயலாற்றிக் கண்டுபிடித்தனர்.

கடந்த இரண்டு மூன்று ஆண்டுகளில் பல விஞ்ஞானிகள் இத் துறையில் உள்ள அபாரமான பயனைக் கருதி, C60 கால்பந்துடனும் C70 ரக்பி பந்துடனும் விளையாட ஆரம்பித்துள்ளனர்.

இந்தியாவிலும், இந்திய அறிவியல் கழகத்தின் இயக்குனரான பேராசிரியர் சி.என்.ஆர். ராவ், சோதனைச் சாலையில் சாதாரணமாக உபயோகப்படுத்தப்படும் ''ஸ்பிரிட் லாம்ப்'' பில் பென்சீன் திரவத்தை எரிபொருளாகப் பயன்படுத்தி, அவ்விளக்கை ஆர்கான் முன்னிலையில் எரித்து, C60 மூலக் கூறுகளைப் பெற்றுள்ளார்.

நிலக்கரிதான் வைரமாகிறது என்பது நமக்குத் தெரியும். நிலக்கரிக்கும் வைரத்துக்கும் உள்ள அளப்பரிய உபயோகம், மதிப்பு இவையும் தெரியும். C60 என்ற மூன்றாவது கரிப்பொருளின் பயன், மற்ற இரண்டையும் தூக்கிச் சாப்பிட்டு விடும் அளவில் அமர்க்களப் படப் போகும் நாள் வெகு தூரத்தில் இல்லை!

(டாக்டர் சி. ஸ்ரீனிவாசன் எழுதிய கட்டுரையின் அடிப்படையில்.)



## அடுத்த இதழில்...

- ●● **ஆஹா, டி-ஷர்ட்!** - ஃபேஷன் ஸ்டோரி
- ●● **பேனசிர் - முர்தாசா** - நீதிக்குப் பின் பாசம்....?



அம்மா : படம் முடிஞ்சு போச்சுடா மகேஷ். எழுந்திரு வீட்டுக்குப் போகலாம்!

மகன் : போம்மா. பொய் சொல்றே. இன்னும் போலீஸ்காரரே வரலையே?

- பாப்ஜுராவ்





* சங்கீத விஷயம்

● ஏ. ஜஹ்பர் காதர், அரியநாயகிபுரம். ❑

*? பத்து லட்சம் இன்லாண்ட் கடித உறையில் இந்தியில் "பாரத்" என்று தவறுதலாக அச்சடித்து விட்டு அவற்றைத் தமிழகத்துக்கு அனுப்பி விட்ட தபால் துறையின் சமயோசிதம் பற்றி...?*

! அவர்கள் சமயோசிதம் கிடக்கட்டும், ஹிந்தி எதிர்ப்பு மாநிலம் இருப்பது எவ்வளவு சௌகரியம் பாருங்கள்! இந்த சௌகரியம் இல்லாவிடில் அந்த சமயோசிதம் எப்படி செயல்பட்டிருக்க முடியும்!




● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன் கோட்டை.

*? மீண்டும் சபாநாயகர் பதவி பி.எச். பாண்டியனுக்கு வழங்க அ.தி.மு.க. முடிவு செய்துள்ளதாமே?*

! பாண்டியன் இப்போ பெட்டிப் பாம்பு. பொறுமையாகப் போதிய கால அளவு காத்திருந்தால் ஏதேனும் பதவி கிடைக்கலாம். ஆனால் சேடப்பட்டியார் இடத்தை அவரால் கைப்பற்ற முடியாது. அவ்வளவு முக்கியமான இடத்தை நிறம் மாறுகிறவருக்கு வழங்கும் அளவுக்கு ஜெ சிந்திக்கத் தெரியாதவர் அல்ல.

● ஏ. சுகுமார், காட்டுக்காஜூர்.

*? மெட்ரோ சேனலில் தமிழில் வரும் இந்தி டப்பிங் நாடகங்களை ரசிக்க முடிகிறதா?*

! சகிக்கவே முடியலையே, ரசிப்பதாவது!

● ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

*? தங்கள் சமீபத்திய கவலை?*

! காஸ் சிலிண்டர் வெடித்த விபத்தில் குழந்தைகள் உள்பட, உதவிக்கு வந்தவர் உள்பட பலர் மரணம். மின்சாரம், காஸ், பிரஷர் குக்கர், ஸ்டவ் அடுப்பு முதலியவை பேருதவி என்றாலும் பேராபத்தையும் உள்ளடக்கியவை. கையாள்வதில் பக்குவம் வேண்டும் என்பதையெல்லாம் எப்போது நம் மக்கள் கற்றுக் கொள்ளப் போகிறார்கள்? அதற்கு என்ன ஏற்பாடு?

● சம்பத், வேலாயுதம்பாளையம்.

*? 'கவர்னர் மாளிகை கவர்னரின் சொத்து அல்ல' என்று எஸ்.டி.எஸ். கூறியுள்ளாரே?*

! தமிழக அரசு 'ஜெ'யின் சொத்து அல்ல என்பதையும் சற்று எண்ணிப் பார்த்தால் நல்லது.

● எஸ்.எஸ்.டி. ராஜன், சிறுதையூர்.

*? "தி.மு.க.வில் பிறந்தவன் நான்; மற்றவர்கள் தி.மு.க.வில் சேர்ந்தவர்கள்" என்று மு.க. ஸ்டாலின் கூறியிருக்கிறாரே?*

! பிறப்பினால் யாரும் உயர்ந்து விடுவதில்லை; தனி உரிமை பெற்று விடுவதுமில்லை என்பதுதான் சுயமரியாதை இயக்கத்தின் அடிப்படையே! மறக்கலாமா ஸ்டாலின்?

● அ. சண்முகசுந்தரம், சிட்லபாக்கம்.

*? "இசை என்று வரும் போது பாரதியாரும் "சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்து" என்றுதானே வர்ணித்துள்ளார்" என்று ஓர் இசை விமர்சகர் சமீபத்தில் ஆராய்ச்சிக் கட்டுரை வெளியிட்டுள்ளாரே?*

! அரை குறை ஆராய்ச்சி என்பது தெளிவு. பாரத தேசத்தின் ஒருமைப் பாட்டை வலியுறுத்த எழுதப்பட்ட கவிதையை ஆய்வாளர் இப்படி மேற்கோள் காட்டுவது அபத்தம். பாரதியின் கட்டுரைகளைப்

## நீங்கள் கேட்டவை – தராசு



* மீண்டும் சபாநாயகர்?



* முதல் அறிகுறி

படிக்கச் சொல்லுங்கள் அவரை. குறிப்பாக ''லங்கேத விஷயம்'' - பக்கம் 122.

● டி. வெங்கட், ஆனத்தூர்.
*? காஷ்மீர் மக்களின் விருப்பத்தை அறிய வேண்டும் என்கிறீர்களே! அவர்கள் பாகிஸ்தானுடன் சேர விரும்பினால் நாம் காஷ்மீரை தாரை வார்த்து விட முடியுமா?*
! 'ராஜாஜியின் கருத்து என்ன?' என்ற கேள்விக்குப் பதிலளித்திருந்தேன். சில விஷயங்களை சந்தர்ப்ப சூழ்நிலைக்கு ஏற்ப சிறிதளவுதான் கூற முடியும். பிறவற்றை நீங்களே யோசித்து உங்கள் அறிவாற்றலுக்கு ஏற்றபடி தக்க முடிவுக்கு வர வேண்டியதுதான்.

● மு. இரவிச்சந்திரன், சேலம்.
*? ''ஜெ தேசிய ஒருமைப்பாட்டின் சின்னமாக விளங்குகிறார்'' என்று செங்கோட்டையன் கூறியதைக் கவனித்தீரா?*
! ஓகோ! அதனால்தான், 'மகாராஷ்டிர நில நடுக்கம்தான் ஊட்டி நிலச்சரிவுக்குக் காரணமா?' என்று ஆராயச் சொன்னாரோ? புரிகிறது! புரிகிறது!

● அ. ஹாஜா முஹம்மது நத்தர், அடியக்கமங்கலம்.
*? ''டில்லி சட்டசபைத் தேர்தலில் பி.ஜே.பி. ஆட்சியைப் பிடித்து விட்டால், அதுவே மத்தியில் நாங்கள் ஆட்சிக்கு வருவதற்கு முதல் அறிகுறி'' என்று அத்வானி கூறியுள்ளாரே?*
! மக்கள் ஆதரவு அளித்தால் ஆட்சிக்கு வரப் போகிறார்கள்; அதிலே என்ன ஆட்சேபணை? என்ன சொல்லி மக்கள் ஆதரவைப் பெறுகிறார்கள் என்பதுதான் கவனிக்கத் தக்கது. லாலிபாப் காண்பித்தும் குழந்தைகளைக் கவரலாம்; சுவாரஸ்யமான முறையில் கல்வி போதிக்கும் திறனாலும் பிள்ளைகளை வசப்படுத்தலாம்.

● வாசுதேவன், பம்பாய்.
*? பொரித்த அப்பளாமுக்கு இருக்கும் டேஸ்ட், சுட்ட அப்பளாமுக்கு உண்டா?*
! அது நீங்கள் சாப்பிடுவது சாம்பார் சாதமா, வற்றல் குழம்பு சாதமா என்பதைப் பொருத்திருக்கிறது!

● கே. மணிகண்டன், இராஜாக்கமங்கலம்.
*? தோழமையின் சக்தியை உணர்ந்திருக்கிறீர்களா?*
! ஆகா! முதுகில் குத்தப்படுவதையும் உணர்ந்திருக்கிறேன்.

● கே. ராஜபாலு, சேலம்.
*? சமீபத்தில் தங்களைக் கவர்ந்த மனிதர் யார்?*
! பங்களாதேஷ், டாக்கா சிறையில் காரணமே இல்லாமல் 21 வருஷங்களாகச் சிறையில் வைக்கப்பட்டிருந்தார் மியா. இப்போது மனித உரிமைக் குழு அவரை ஜாமீனில் விடுவித்திருக்கிறது. 'என்னுடைய 21 வருஷங்களை யார் திருப்பித் தருவார்கள்? என் குடும்பத்தை நான் எங்கே என்று தேடுவேன்?' என்று கதறுகிறார் மியா. இவரைப் போலவே, இந்தியா உள்பட உலக நாடுகள் பலவற்றில் இன்னும் எத்தனை பேரோ!


* தி.மு.க.வில் பிறந்தவர்


* 'ஒருமைப் பாட்டுக்கு ஜெ'!


* ஆளுனருக்கு எதிர்ப்பு

● என். ரமேஷ், திருப்பாதிரிப்புலியூர்.
*? இந்த ஆண்டு மழை எப்படி?*
! மழையெல்லாம் சரியானபடிதான் பெய்தது. ஆனால் அதனைச் சந்திக்கும் ஆற்றலும் சேமித்துப் பயன்பெறும் ஆற்றலும்தான் இழந்து நிற்கிறோம். பலத்த பருவ மழையைச் சந்திக்க வேண்டியிருக்கும் என்ற உணர்வு இருந்திருந்தால் ஊட்டி மலைப் பாதையில் சரிவு நேர்ந்திராது. விழிப்புடனிருந்து, தக்க முன்னேற்பாடுகளைச் செய்து செப்பனிட்டு வைத்திருப்போம். மழை நீர் வீணாகாமல் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற உணர்வுடன் செயல்பட்டிருந்தால் சென்னை, பூண்டி நீர்தேக்கத்தில் வந்து சேர்ந்த உபரி நீரை குஷஸ்தலை யாற்றுக்குத் திருப்பி விடாமல் சோழவரம் அல்லது ரெட் ஹில்ஸ் ஏரிக்கு அனுப்பிச் சேமித்திருப்போம். குஷஸ்தலையாற்றுக்கு அனுப்பியதில் நீரும் வீணாச்சு; அங்கே பாலமும் வெள்ளத்தில் தகர்ந்தது. (ஆற்று மணலை லாரி லாரியாக அள்ளிப் போனதில் பாலத்தின் அஸ்திவாரம் பலவீனப் பட்டுப் போனது வேறு விஷயம்.)

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
ஏ. ஜஹ்பர் காதர்,
அரியநாயகிபுரம் அஞ்சல்,
விளாத்திகுளம் வட்டம் - 627 901.




# முன்னேற்றமடைந்த முஸ்லிம் மகளிர்!

டுனீஷியா கேள்விப்பட்டிருக்கிறீர்களா? வடக்கு ஆப்பிரிக்காவில், அல்ஜீரியாவுக்கும், லிபியாவுக்கும் இடையே இருக்கிற நாடு. முஸ்லிம் சமுதாய மக்கள்.

குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தில், உலகிலேயே மிக வெற்றிகரமாக இவர்கள் செயல்பட்டு வருகிறார்கள் என்று கேள்விப் பட்டு, ஆச்சரியமாய் இருந்தது. குடும்பக் கட்டுப்பாடு என்பதே இஸ்லாமியக் கோட்பாட்டுக்கு எதிரானது ஆயிற்றே?

ஆனால் நேரே போய்ப் பார்த்த போது தான் ஆச்சரியப்பட வைக்கும் விஷயங்கள் நிறையவே இருப்பது தெரிந்தது. முதலில், பர்தா அணிந்த பெண்களையே அங்கு பார்க்க முடியவில்லை!

அடுத்தது : பலதார மணம் இஸ்லாமிய சமூகத்தில் அனுமதிக்கப்பட்டதாயிற்றே? டுனீஷியாவில் - மூச்! பலதார மணம் தடை செய்யப்பட்டிருக்கிறது! (பிரான்சிடமிருந்து 1956-ல் விடுதலை பெற்றது முதலே, இந்தத் தடைச் சட்டம் அமலுக்கு வந்து விட்டதாம்.)

பதினேழு வயதுக்குக் குறைந்து ஒரு பெண்ணுக்குத் திருமணம் செய்யக் கூடாது. தகப்பனார் இறந்து விட்டால், மைனர் குழந்தைகளுக்குத் தாயார்தான் காப்பாளர். டிவோர்ஸ் செய்ய ஆணுக்கு எத்தனை உரிமை உண்டோ, அத்தனை உரிமை பெண்ணுக்கும் உண்டு. பெண்களில் 52 சதம் எழுத்தறிவு பெற்றிருக்கிறார்கள். கல்வியறிவு பரவுமானால், குடும்பக் கட்டுப்பாடும் பரவும் போல.

டுனீஷியாவுக்குப் போன போது, இரண்டு முக்கியப் பெண் பிரமுகர்களைச் சந்தித்தேன் :

ஒருவர் நலியா மெஸ்ஹ‌ூ‌ட். மகளிர் மற்றும் குடும்பநல அமைச்சர். 20 பேர் கொண்ட அமைச்சரவையில் ஒரே பெண் மந்திரி. இஸ்லாமிய அடிப்படைவாதிகளின் எதிர்ப்பைப் பொருட்படுத்தாமல், பெண்கள் முன்னேற்றத்தை மட்டுமே நோக்கமாகக் கொண்டு, முன்னாள் அதிபர் ஹபீபும், இப்போதைய அதிபர் பென் அலியும் காண்பித்த அக்கறையே இவர் இப் பதவி வகிக்கக் காரணம்.

இன்னொருவர் ஃபீலா கெஃபி. டுனீஷிய மகளிர் தேசிய சங்கத் தலைவி.

இரண்டு பேருமே படு மாடர்ன். நான் அசந்து போய் விட்டேன். மிக முன்னேறிய டுனீஷிய சமூகப் பெண்மணிகளின் பிரதிநிதிகள் என்று இவர்களைச் சொல்ல வேண்டும்.

நலியா பிரான்சுக்குப் போய் மருத்துவம் படித்தவர். 1980ல், பிராக்டிஸ் செய்து கொண்டிருக்கும்போதே மெக்ரீன் நகர மேயராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். முதல் பெண் மேயர். அப்புறம் டுனீஷிய மகளிர் தேசியச் சங்கத் தலைவி. சென்ற வருடம் அமைச்சர்.

ஃபீலாவின் அப்பா அரசு அதிகாரி. வழக்கறிஞராக சன்னது பெற்றும், அப்பாவைப் போலவே அரசு அதிகாரியாகப் பணியாற்ற விரும்பினார் ஃபீலா. எல்லா இலாகாக்களிலும் வேலை பார்த்தார். தற்போது மகளிர் தேசிய சங்கத் தலைவி. நாளை?

அமைச்சரவையில் இரண்டாவது பெண் மந்திரி ஆகலாம். பலதரப்பட்ட இலாகாக்களில் பணிபுரியும் பெண்களின் பட்டியலை அடுக்கிக் கொண்டே போனார் ஃபீலா. பிஸினஸ், அரசியல் இரண்டில் தான் குறைச்சலாம்!

இதை சகித்துக் கொண்டு நலியாவும், ஃபீலாவும் சும்மா இருப்பார்களா என்ன? அவற்றிலும் கணிசமான இடத்தைப் பெண்கள் நிச்சயம் பிடித்து விடுவார்கள், பாருங்கள்!

– ஆதாரம் : 'வீக்' இதழில் ராகுல்சிங் எழுதிய கட்டுரை

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# இதைவிட எளிய வழி எதுவுமே இல்லை!...



பத்தாவது வரை தமிழ் மீடியத்தில் படித்து விட்டு +1ல் இங்கிலீஷ் மீடியத்தில் சேர்ந்த எனக்கு "கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போலிருந்தது" டீச்சர்கள் நடத்தும் பாடங்களைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியாமல் மிகவும் திண்டாடினேன்.

என்னுடன் தமிழ் மீடியத்தில் படித்த எனது வகுப்புத் தோழிகள் பலர் விவேகானந்தாவில் தபால் மூலம் ஆங்கிலப் பயிற்சி பெற்று வருகிறார்கள். இதனால் இவர்களால் பாடங்களை ஈஸியாக பிக்-அப் செய்து கொள்ள முடிகிறது. நானும் இப் பயிற்சியில் சேரட்டுமா? என்று அப்பாவிடம் கேட்டதற்கு "முதலில் ஸ்கூல் பாடங்களை ஒழுங்காகப் படி, அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்" என்று சொல்லி விட்டார்.

குவார்டர்லி எக்ஸாமில் மார்க்குகள் மிகவும் கம்மியாகிவிடவே, நான் அழுது கொண்டே, அம்மாவிடம் விஷயத்தைச் சொன்னேன்.

உடனே, அம்மா, அப்பாவிடம் இதுபற்றிப் பேசி, அவரை 'கன்வின்ஸ்' செய்து என்னை விவேகானந்தாவில் சேர்த்து விட்டார்.

தினசரி அரைமணிநேரம் செலவிடும் வகையில் விவேகானந்தாவின் பாடங்கள் அமைக்கப்பட்டிருந்ததால், நானும் அது போலவே, தினமும் அரைமணி நேரம் ஆங்கிலப் பயிற்சிப் பாடங்களைப் படித்தபிறகு மற்ற நேரங்களில் ஸ்கூல் பாடங்களில் கவனம் செலுத்தினேன்.

அடிப்படையிலிருந்து துவங்கி, ஆங்கில இலக்கணம், முழுவதையும் இப்பயிற்சியின் மூலம் மிகச் சுலபமாகக் கற்றுக் கொண்டேன்.

இப்பயிற்சியின் உதவியால் +1 மற்றும் +2 தேர்வுகளை எழுதிப் பாஸ் செய்துவிட்டு இப்பொழுது ஒரு கல்லூரியில் B.Sc., படித்து வருகிறேன்.

என்னைப் போன்ற மாணவ, மாணவிகள் தமிழ் மூலம் சுலபமாக ஆங்கிலம் கற்றுக் கொள்ள விவேகானந்தாவின் ஆங்கிலப் பயிற்சியைத் தவிர வேறு எளிய வழி எதுவும் இல்லை என்பதே என் கருத்து.

**G. சுஜாதா**

வீட்டிலிருந்தபடியே, ஓய்வுநேரத்தில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியினை மேற்கொள்ளலாம்.

*"நேர்முகப் பயிற்சியும் உண்டு"*
*கீழ்க் காணும் முகவரியில் தொடர்பு கொண்டு நீங்களும் பயன் பெறலாமே!*




**விவேகானந்தா கல்வி நிலையம்**

*9, நடேசன் தெரு, தி.நகர்,*
*சென்னை-600 017.*

NAGA/T.M/93

